*Teṉṟal*

*Malar 1, itaḻ 22*

*November 27, 1954*

Record no. 947

# தென்றல்

"போற்றுபவர் போற்றட்டும்;
—புழுதிவாரித்
தூற்றுபவர் தூற்றட்டும் ;
தொடர்ந்து செல்வேன் !
ஏற்றதொரு கருத்தை
என(து)
உள்ளம் என்றால்
எடுத்துரைப்பேன் ; எவர்
வரினும்
நில்லேன் ; அஞ்சேன் !"

ஆசிரியர்: கண்ணதாசன்

ஆண்டு சந்தா 6—0—0
6 மாதச் சந்தா 3—0—0

உள் நாடு (இலங்கை உட்பட) விலை இரண்டணா. | வெளி நாடு: மூன்றணா. | அலுவலகம்: 'தென்றல்' சென்னை-14.

| மலர் 1 | சென்னை | 27—11—1954 | சனிக்கிழமை | இதழ் 22 |
|---|---|---|---|---|


# நடிப்புப் புலவர் என்றும் நம்மவர் !

'ஆகா' நடிகர்கள் எல்லாம் அரசியலில் தலையிடுகிறார்கள். 'ஊசூ கலைஞர்கள் அரசியல் மேடையேறத் தொடங்கி விட்டனர் என்று சிலர் ஓயாமல் கூச்சல் போட்டு வருகிறார்கள். கலைஞன்—நடிகன் என்றால் சமுதாயத்திலிருந்து விலகி நிற்பவன் என்பதல்ல பொருள் ! அப்படி விலகி நிற்பவனும் நடிகனாக மாட்டான்.

நடிகன், நாட்டின் நிலையை விளக்கிக் காட்டுபவன். சமுதாயத்தின் கோணல்களை, நாட்டு மக்களின் மனவளத்தை கெடுத்துவிடும் மூடப்பழக்க வழக்கங்களை குத்திக் காட்டி—தெளிவுபடுத்த வேண்டும். மனிதனுக்கு பல சூழ்நிலைகளில் ஏற்படும் மனமாற்றங்கள் — எண்ணக் குழப்பங்களால் ஏற்படுகின்ற உயிர் உணர்ச்சிகளை முகபாவத்தின் மூலம் நடித்துக்காட்டுபவன், மக்களின் பாராட்டுதல்களுக்கு ஆளாகிறான். அவன் மக்களுக்கு ஒரு பொழுது போக்கைத் தருவதுடன் சிந்தனைக்கும் வேலை தந்து விடுகிறான். அத்துடன் மக்களிடம் நேரடித் தொடர்புகொண்டு—மக்களின் தேவைக் குரல்களை எடுத்துக் கூறி, தாயகத்தின் கட்டுகளைஅறுத்தெறியும் தூயபணியில் ஈடுபடும் போது—நாட்டுக்கும்—மக்களுக்கும் உழைத்தவனாகிறான்: நாட்டோரின் இதயங்களில் ஓர் உயரிய -என்றும் அகலாத ஒரு உன்னத இடம் பெறுகிறான். கலையை கருத்துப் புரட்சிக்குப் பயன்படுத்தவேண்டும்: கலை—மனிதனுக்கு அப்பொழுது தான் பயன்படும்—பலன் தரும்.

கொள்கையைப் பின்னணியாகக் கொண்ட கலைப்பணிகளில் தான்—நடிப்பின் அழகையும் — கலையின் முழுப் பொலிவையும் காண முடிகிறது. பொதுவாக கலைப்பணியில் 'உயிர்' இருக்கிறது. எனவே நடிகனுக்கும் மக்கள் நல்வாழ்வில்—தாயக மீட்சியில்—நாட்டின் அன்றாட நடப்புகளில்—நாட்டாட்சியில் முழுக்க முழுக்க பங்குண்டு. எந்த நடிகனுக்கும்வாழ்க்கையில் ஒரு லட்சியம்—நோக்கம் கொள்கை இருக்க வேண்டும்! கொள்கை இல்லாத மனிதன் ஒளி இல்லா மாளிகை—திசை காட்டும் கருவி இல்லாத கப்பல்: அதிலும் கலைப்பணிக்கு கொள்கைக் கலங்கரை மிக மிகத் தேவை. அரசியல் தொடர்போ அதனிலும் தேவை.

— நடிப்புப்புலவர் இராமசாமி —

# எண்ணம்

கண்ணதாசன்

தமிழ் நாடு பெருமை வாய்ந்தது; இலக்கியம் மிகுந்தது; மிகப் பழமையானது. 2000 ஆண்டுப் பழமையுள்ள இலக்கியங்களைத் தன் கைக்கே கொண்டது - இதெல்லாம் சரிதான்' ஆனால், இந் நாட்டிலே, எந்தெந்தக் காலங்களில் என்னென்ன நடந்திருக் கின்றன என்று பார்த்தால், இந்தப் பெருமை யெல்லாம் மாறு படுத்தப் பட்டிருப்பது தெரிய வரும்.

நான் சொல்வது இது தான்· தமிழ் இலக்கியங்களில் பெரும் பல, பிறந்த மேனிக்கு இயங்கவில்லை. இடையில் வந்த பல பேர். தங்கள் விருப்பப் படியெல்லாம் இலக்கியங்களை வளைத்திருக்கிறார்கள். திருக்குறளிலிருந்து சகல இலக்கியங்களிலும் இடைச் செருகல் வேலை நடந்திருக்கிறது. இதைச் சொல்லும் போது, எனக்கே புரிகிறது, பைத்தியக்காரப் பட்டம் கட்டப் பல பேர் முன் வருவார்கள் என்பது. அவர்கள் பக்திக்கண்ணோடு படிக்கிறவர்கள்; நான் பகுத்தறிவுக் கண் கொண்டு படிப்பவன். திரும்பத் திரும்பப் படித்துப் பார்த்ததில் எனக்குப் புரிவது இது தான். திருக் குறளில் எவனோ இடையில் 'செருகல்' வேலை செய்திருக்கிறான் சட்டையிலே ஒட்டுப் போட்டது போல் தனியாக நிற்கின்றன சில குறள்கள். இது வள்ளுவன் மொழியாக இருக்க முடியாது என்பதற்குச் சுத்தமான ஆதாரங்கள் காணலாம். மற்றக் குறள்களை ஆராய்வதே அதற்கு வழி. இதை ஏன் வலியுறுத்துகிறேன் என்றால், உருப்படியாக உள்ள ஒரே இலக்கியம், உருச்சிதைந்து கிடக்கக் கூடாது என்பதால்தான்.

நூதனமாக இந்த இடைச் செருகல் வேலை சமீப காலம் வரை நடந்து வந்திருக்கிறது. புறநானூற்றில் ஒருபாடலில் ஒருவரியைத் தங்கள் வாழ்வுக்குச் சாதகமாகத் திருத்தி வைத்துள்ளார், டாக்டர் உ. வே. சாமிநாதையர். சோழன், குளமுற்றத் துஞ்சிய கிள்ளி வளவன் என்பானைப் பற்றி, ஆலத்தூர் கிழார் எனும் புலவர் பாடியதாக புறநானூற்றில் காணப்படும் (34) பாடல் ஒன்றை எடுத்துக் கொள்வோம். இது இப்படி உள்ளது.

ஆன்முலை யறுத்த அறனிலோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென

இப்படித் தொடர்கிறது பாடல். இதன் பொருள், "பசுவின் மடியறுத்த தீவினையாளருக்கும்,பெண்களின் கர்ப்பத்தைச்சிதைத்தவர்க்கும், தாய் தந்தையர்க்குத் தீங்கு செய்த கொடுமையாளருக்கும் அவர் செய்த பாதகத்தை ஆராயுமிடத்து அவற்றைப் போக்கும் வழியும் உளவெனவும்..."

சுருக்கம் இது: "தீய செயல்களில் பெரிது பசுமடி அறுத்தலும், கருச்சிதைத்தலும், பெற்றோரைப் பிழைத்தலும் ஆகும்" இந்தப் பாடலில், மகா மகோபாத்யாய தாட்சிணாத்ய கலாநிதி, உ. வே. சாமிநாதையர்,தன் இனத்தைக் காக்க ஒரு வேலை செய்துள்ளார். 'குரவர்த் தப்பிய கொடுமையோர்' என்ற இடத்தில், 'பார்ப்பார்த் தப்பிய கொடுமையோர்' என மாற்றி அமைத்துள்ளார்.

அதாவது, தாய் தந்தையர்க்குத் தீங்கிழைப்பது கொடுமை என்பதைத் திருத்தி, பார்ப்பனர்களுக்குத் தீங்கிழைப்பது கொடுமை என ஆக்கியுள்ளார்கள். புறநானூற்றுக்கு மற்ற புலவர்களின் விளக்கப் பதிப்பையும் பார்த்துவிட்டு,சாமிநாதையர் பதிப்பையும் பார்த்தோமானால், இவர் மட்டும் இந்த வேலை செய்திருப்பது காணவரும். இது நடந்தது சமீப காலத்தில்! (இது பரிமேலழகர் காலத்திலேயே திருத்தப்பட்டிருக்க வேண்டும் என ஔவைப்பிள்ளை கருதுகிறார். எதற்கு, சாமிநாதைய ரோடு வம்பு என்று நினைத்தோ, அல்லது உண்மையிலே அவ்வாறு கருதியோ நமக்குத் தெரியாது.) ஆனால் குரவர், பார்ப்பார் ஆகியிருப்பது உண்மை, இந்தத் திருகுதாளம்' இலக்கியம் பூராவிலும் நடந்துள்ளது; இது மட்டும் ஆதாரத்தோடு தெரிகிறது — அவ்வளவுதான்!

அவனவனும் தான் என்னென்ன கருதுகிறானோ, அதனைக் காவியத்தில் புகுத்தி, தன் கருத்தை, மூல ஆசிரியன் கருத்தாக்குகிற முயற்சியில் ஈடு படுகிறான். தனக்குச்சாதக மானதை, தன் இனத்துக்குச் சாதகமானதை செருகி வைத்து விட்டுக் கண் மூடி விடுகிறான். சிலப்பதிகாரமும் இந்தப் பரிதாபகரமான நிலைக்கு ஆளாகியிருக்கலாம். சுருங்கச் சொன்னால், "திருக்குறளில் - நிச்சயமாக - செருகல் வேலை நடந்திருக்கிறது என்ற முடிவுக்கு நான் வருகிறேன்." இதைச்சீர் படுத்திப் பார்க்க வேண்டியது புலவர்கள் பொறுப்பு.

"ஆஹாகா! வந்தது மோசம்! திருக்குறளைத் திருத்துவதா? என்றெல்லாம் சிலர் குதிக்கத்தான் செய்வார்கள். இந்த நாட்டிலே பாட்டுக்கு. ஆடுவது என்று நாட்டியக்காரிகள் இருப்பது போல பேச்சுக்கு ஆடுவது என்று சிலர் இருக்கிறார்கள், இவர்கள் எதற்கும் குதிப்பார்கள். உயிர் போன பிறகு தான் இவர்கள், குதிப்பதை நிறுத்துவார்கள். இவர்களைப் பற்றி கவலைப்படாமல் புலவர்கள் இந்தப் பணியில் ஈடுபட வேண்டும்.

# இலக்கியத்தில்

## நிலவு!

வேளுக்குறிச்சிக்குத் தலைவனை வேலப்பன், அழகிலே சிறந்தவன் - வறுமையாளர்களைக் கண்டால் இரக்கம் கொண்டு அவர்கள் வாழ்க்கைக்குத் தேவையான உதவிகளைச் செய்பவன் - கற்றறிந்த புலவர்களுக்கு இடைவிடாது பொருளை, அள்ளி அள்ளிக் கொடுக்கும் வள்ளல் தன்மை கொண்டவன்.

அத்தகைய அருங்குணத்தோன், ஒரு நாள்மேள தாளங்களோடு ஊரைச்சுற்றிப் பார்க்க, அழகிய முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட தேரின்மீது அமர்ந்து ஊர்வலம் வருகிறான். அவ்வேளையில் அந்த ஆணழகனைக் காண, கணக்கற்ற பெண்கள் வந்து நிற்கின்றனர். நாம் இந்த அழகனைப் பெற முடியுமா? நமக்கு இவனது நட்பு கிடைக்காதா? என்ற ஏக்கத்தோடு தம் தம் மனத்திலேயே எண்ணி ஏக்கமுறுகின்றனர். எல்லாம் அவனது அழகால் சேர்ந்த விளைவு.

இந்த விதமாக ஏக்கங் கொண்டு நிற்கும் பலருள், சித்தினி என்ற மங்கையும் ஒருவளாகத் திகழ்கிறாள். ஆனால் எல்லாப் பெண்களின் ஏக்கத்தையும்விடஒரு படி மீறி,அவனையே உற்று நோக்குகிறாள். பிற பெண்களெல்லாம் மயக்க முறுவதைக் காட்டிலும் சித்தினி, தன்னிலை இழந்தவளாய், அவ்வளவு பெரிய திரளான கூட்டத்தில் தோன்றுகிறாள். பிற பெண்களெல்லாம், 'இவனது நட்பு கிடைத்தால் நல்லது. ஆனால் கிடைக்காது!" என்று முடிவு செய்துகொண்டு தன் பார்வையைச் சற்றுக் குறைத்துக் கொள்கின்றனர். ஆனால் சித்தினியோ தன் ஆவலை அதிகமாக்கிக் கொள்கிறாள்.

வேலப்பதுரை, கிழக்கே உதித்த கதிரவன் மேற்கே மறைந்து செல்வதைப்போல் சித்தினி பார்த்துக்கொண்டிருந்த வீதியைவிட்டு, தன் இருப்பிடத்தை நோக்கிச் சென்றுகொண் டிருக்கிறான். சித்தினியோ கவலை கொண்ட முகத்தோடு தன் வீடு நோக்கித் திரும்புகிறாள்.

வழிகெடுக்க நினைத்த நினைவோடு வீட்டினுள் நுழைகிறாள். அவள் கண்ட ஆணழகனின் உருவம், கண்முன் நீங்காது, கண்களில் தங்கியிருக்கும் நீரோடு போராடிக்கொண்டிருக்கிறது. ஆகவே வீட்டைப் பார்த்தவுடன் அவளுக்கு ஒரே இருளாகவே காட்சியளிக்கிறது, மேலும் துயரம்அதிகமடைய, தன்னை மறந்து நிற்கிறாள். சில மணி நேரத்திற்கெல்லாம் அவள் கண்ணில் தேங்கிக் கிடந்த தண்ணீர், நிலத்தை நோக்கி விழுகிறது. அப்போதுதான், 'ஏன் இப்படி நிற்கிறோம்?' என்ற உணர்வு உண்டாகிறது. அதோடு மலர்த் தோட்டத்தை நோக்கி வருகிறாள் இவள். தேங்கிக்கொண்டிருந்த உலகிற்கு வெளிச்சத்தை அளிக்க சந்திரன் வருகிறான். அதைப் பார்த்த சித்தினிக்கு நிலவின்மீது ஏதோ ஒருவித வெறுப்புணர்ச்சி உண்டாகிறது. இதற்கு முன்பெல்லாம் சித்தினி, சந்திரனைப் பற்றிப் புகழ்ந்ததுண்டு. ஆனால் இப்போது அந்த நிலவைக் கண்ட மாத்திரத்திலேயே தூற்ற ஆரம்பிக்கிறாள். காரணம், எல்லாம் காதல் செய்கின்ற வேலை. வேலத்துரையைக் கண்ட அவள், தன்மனத்தைப் பறிகொடுத்து, அதனால் ஏற்பட்ட மனக்குழப்பத்தால் திங்களைத் தூற்ற முனைகிறாள். (இதைத்தான் மாம்பழக் கவிச்சிங்க நாவலர், எல்லாப் புலவர்களையும்விட உயர்ந்து, காதலின் தன்மையைப் பற்றி புகழ்கிறார்,

ஏ, அழகு நிலவே! உன்னுடன் போட்டி போட்டுக் கொண்டு இருளானது ஓடி வருகிறது. அந்த இருளை அகற்ற உனது ஒளியை உலகிற்கு அளிக்கிறாய். அவ்விதம் உன் ஒளியானது பரவியிருக்கும் நேரத்தில், முல்லை.

மலர்களெல்லாம் மலர்கிறது நான் இவ்விதமாகக் கூறினேன் என்பதற்காக உன்னுடைய பூக்கிறதென்று கருதி அகங்காரம் கொள்ளாதே! இயற்கையாகவே முல்லை மாலையில் மலர்வது, ஆகவே நீ பெருமிதம் கொள்ளுவதற்கு இடமில்லை. நீ வரும்போது உன்னுடனே மேகக் கூட்டங்கள் அடுக்கடுக்காக வந்துகொண்டிருக்கிறது. அதனிடையே மறைந்து தோன்றியும் வருகிறவன் நீ! என்று சித்தினி கூறிவிட்டுத் தன்னைப் பற்றிக் குறிப்பிடுகிறாள்.

மையல் வளர முலைபோலிய
மானச் சோதி புறந்துவள
வளர்ந்த வார முதுகுலவ
மஞ்சங் கடுக்க வருவேனுன்

வே. கபில...

Best copy available



# பெரும்பயணம்

கண்ணதாசன்

மகிழ் கண்ணீர்ப் பெருக்கோடு வானும் கண்ணீர்
மணிமுத்தம் பிலிற்றிற்றும்; உணர்வால் ஒன்றி
முகிழ் கொத்துப்பிணை போலும் போவார் உள்ளில்
முகம் பெற்றுப் போயிற்றும் பழநாள்; காண,
ஞெகிழ் நெஞ்சம் இலையேல் அந்நெஞ்சம் முற்றும்
நிலைகெட்டுப் பழிப்புற்ற நெஞ்சாம் என்பேன்!
நகழ்வுற்றுத்தினம் சாகும் திருநாட்டார் புன்
நகைபெய்யத் தலைவோர் தேர் தெருவில் ஊரும்!

* * *

"இருந்தேனே; அன்றங்கே இருந்தேனே நான்!
இழந்தேனே; நல்லின்பம் இழந்தேனே நான்!
பெருந்தானை மறவோரைக் காணேனே நான்!
பிழை செய்தேன்! இனியென்றே காண்பேன்" என்றே
வருந்தாதார் குறைவாகும்; அந்நாள் நந்தம்
வரலாற்றிற் பொன்னாளாம்! அலைபாய் வெள்ளம்
கடந்துள்ளே வாராமல் அணை போட்டாற் போற்
கடலோரம் பெருங்கூட்டம்! நாடே ஆங்கு!!

* * *

சிறை சென்ற தாய்மார் ஓர் புறமும் தொண்டுச்
சீரார் ஓர்புறமும், வாள் அணிகொண்டாற்போல்
முறையாக இருந்தார்! நல் எழிலார் மேடை
முழுதும் நம் தலைவோர்கள் அமர்ந்தார்! தூய
அறிவாளர் அண்ணாவின் உரையும் ஈரோட் (டு)
'ஐயா'வின் உரையும் கேட்டெழுந்தார்! அள்ளித்
தருவார்கள் முன்னேறிப் பெரியார் கையில்
தருகின்றார்! தருகின்றார்!! பொன்னும் பூவும்!!

* * *

சென்னைவாழ் தமிழ் மக்கள் சார்பில் ஆங்கே
சேர்த்திட்ட ரூபாய் ஆயிரத்து ஒன்றை
அண்ணாவே பெரியார் தம்கையில் ஈந்தார்,
அணுவேனும் மாசில்லா அவர்தம் பண்பால்!
திண்ணாரும் தலைவோரும் சிரிப்புச் சிந்தி
செழிப்பான முகங்காட்டிப் பொருளைப் பெற்றார்;
"கண்காட்டும் ஆணைக்குப் பலலட்சம் பேர்
காத்துள்ளார்" எனலன்றி இதற்கென் அர்த்தம்?

* * *

பெரியார்க்குப் பெரும் வாய்ப்பு அவர்தம் தோற்றம்!
பிறவோர்க்குப் பெரும் பேறு அவர்தம் ஞானம்!
அறியார் நெஞ்சறிவூற அறிவூர் சொற்கள்
அறைவார் நல்உரை கேட்டோர் அறிவார்! கீழ்மைச்
சிறியார் தாம் அறியார்! உள்(த்)திடத்தார்; கல்வித்
திருவார் நம் பெரியார் அத்திரு நாள் தன்னில்
பெரியார்தான்! நம் அண்ணா அறிவுச் செல்வம்
பேராளன் துணைநிற்கச் சிறுமை ஏது!

* * *

"ஆயிரத்து ஒருரூப்பாய் பெற்றேன் இன்று;
ஆயிரத்து ஒரு பேரைச் சிறையில் கண்டு!
பாயவரும் மறுபோரில் மேலும் செல்லப்
பத்தாயிரம் பேர்கள் வருவார்! அன்று
ஆயிரத்தைப் பத்தாக்கி ஒன்று சேர்த்து
அளிப்பீர்கள் ஒருபத்தாயிரத்து ஒன்று!
பாயிரத்துப் போர் ஈது! மகிழ்ச்சி! இங்கு
படமெடுக்கும் கருநாக இந்தி தன்னை

* * *

அடுத்தாண்டுக்குள் ஆட்சி எடுக்காவிட்டால்
ஆணைக்கு நடை போடக் காத்திருங்கள்!
அடித்தாலும் கொன்றாலும் கவலோம்! இந்தி
அரசாளும் வரை வாழ்வு நாட்டிற்கில்லை!
கெடுத்தாரே தாய்நாட்டை—அவர்கள் வாடக்
கெடவேண்டும் இந்தித்தீ! பட்டம் கோடி
கொடுத்தாலும் தொடுவோமா! மாட்டோம்" என்று
குரலோச்சும் பெரியாரைப் புவி வணங்கும்!

27—10—1939

நிலைக்காத அதிகாரம் கையில் கொண்டு
நீள் நாக்கும், புறம்போக்கும் துணையாய்க் கொண்ட
'கொலைகாரன்' ஆச்சாரியாரை இன்று
குடஞ்சாய்த்து அறமன்றம் வெளியேற்றிற்று!
"விலைதந்து பெற்றீரோ ஐயா! மெத்த
வெறும்போடு போட்டீரே! போதும்! போவீர்!
அலைவீரே இனிமேல் உம் இனத்தார்போல!
அதுவன்றிப் பழங்கதை புதுக்குவீரே!"

* * *

எனப் பல்லோர் இகழ்பேசத் தலை குனிந்து
இற்சென்றார் ஆச்சாரியார்! என்றாலும்
இனப்பண்பைக் கெடச் செய்யும் இந்திக் கோலம்
இந்நாட்டின் வாசல் விட்டேகக் காணோம்!
"மனமாற்றம் இனித் தோன்றும்; கவர்னர் ஆட்சி
வழி செய்யும்" எனத் தூது வந்ததாலே
சினங்காத்து மொழிப் போரைச் சில நாள்மட்டும்
'சிறகு'க்குள் நிறுத்திட்டார் பெரியார்! பின்னர்

* * *

சேரர்க்கும் சோழர்க்கும் பாண்டியர்க்கும்
திடம்கூறும் அளவுக்கு உரம் மிகுத்த
சீராளன் பன்னீர்ச் செல்வம் அறிக்கைச்
செய்தியிலே கீழ்க்கண்ட திறம் உரைத்தார்,
"ஆறட்டும் அமரட்டும் மொழிப்போர் என்று
அறிவித்தோம்; எனில் அஃது பயத்தால் அல்ல!
மாறட்டும் மனம்; வந்த ஆட்சியாளர்
மதிக்கட்டும் மொழிப்போரை என்பதாற்றான்!

* * *

பெரும் போராம் இரண்டாம் போர் ஆங்கிலர்க்குப்
பெருந்தொல்லை தருகின்ற இந்நேரத்தில்
மறுபோராய் எம்போரும் நடந்தால், அன்னார்
வழிகாண முடியாமல் திகைப்பார்! ஆக
மரியாதையாய் இந்தி போகவேண்டும்!
மதியாரேல் மறு போர்க்குத் தயங்கமாட்டோம்!
சிறையூடு உயிர்வேகும் எம்மனோரைச்
சிறைமீட்டுத் தரல் ஆளுவோர் பொறுப்பு!"

* * *

எனச் சொல்லி நான்கே நாள்! சிறையிருந்த
எல்லோரும் வெளிவந்தார்! நன்றி கூறி
குணக்குன்று செல்வம், குமார ராசா
கொல் வேங்கைப் பெரியார்—இம் மூவர் தந்த
இனிப்பான செய்தியிலும் முடிவில் நின்ற
எச்சரிக்கை இதுவாகும்; "இந்தித்தாசி
இனியேனும் போவாளா? போகாளாகில்
இலை சாந்தி! மறு போர்தான்! கவர்னர் காண்க!"

* * *

இச் செய்தி வெளிவந்த பனிரண்டாம் நாள்
"இனிப் புதிய பள்ளிகளில் இந்தி இல்லை!
நற்செய்தி தருகின்றோம்!" எனவோர் செய்தி
நாடாளும் ஆட்சியினர் அறிவிக்கின்றார்!
"நம் சேய்கள் இனிவாழும்! அடடா! நாடு
நலங்காணும்!" இவ்வாறு தமிழ் நாடெங்கும்
இற்சென்று இச்செய்தி மகிழ் வூட்டிற்று!
இனிஎன்ன? "இருக்கின்ற பள்ளி நீங்கி

* * *

வெளியேற்றும் வழிகளையும் காண்பீர்!" என்று
விடுக்கின்றார் நம் செல்வம் மீண்டறிக்கை!
"களிப்பூட்டும் அக்காலம் வரும் வரைக்கும்—
கட்டாய இந்தி வெளியேறு மட்டும்—
விழிப்போடு செயலாற்ற வருவீர்" என்று
வேல் கோர்த்த சொற்கூட்டி மொழி யுரைப்பார்!
"குழிதோண்டி இருக்கின்றோம்! இந்தி எங்கே?
கொடுப்பீரே!" என் மக்கள் கேட்கின்றாரே! (தொடரும்)

# அனைத்திந்திய வானொலியில் அநீதி!

தமிழ் நாட்டிலுள்ள வானொலி நிலையங்கள் - குறிப்பாக சென்னை திருச்சி போன்ற இடங்களில் தமிழுக்கு முக்கியத்துவம் அளிப்பதில்லை ; இது குறித்து முன் பொருமுறை திருச்சி தமிழன்பர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் அவர் நடத்தி வந்த 'தமிழர் நாடு' என்ற இதழில் ஒரு விளக்கக் கட்டுரை தீட்டி இருந்தார் : அதோடு மட்டுமல்ல - தமிழ் தெரியாத தமிழ் இசை உணராத - தமிழ் என்ருல் 'வீசை' எப்படி என்று கேட்கும் அளவிற்கு தமிழில் ஞானம் பெற்றவர்கள் எல்லாம் அங்கு கூடிக் கொண்டு தமிழ்க் கொலையை கூட்டணியாக செய்து வருகின்றனர் : இதை சாதி - மத - கட்சி - வேறுபாடுகளை மறந்து தமிழர் அனைவரும் - தமிழன் என்று சொல்லிக் கொள்ளும் ஒவ்வொருவரும் கண்டிப்பது அவர்கள் கடமையாகும் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இன்றளவும் இந்த வானொலி நிலையங்கள் இயங்கி வருகின்றன நிலையைக் கவனித்தால் - திருத்திக் கொண்டதாகவோ - திருந்துவார்களென்றே நம்பவும் இடமில்லாமல் இருக்கிறது : தங்கத் தாம்பளத்தில் அழுகிய பழங்களை அடுக்கி வைத்தால் - மயில் தோகையில் சாக்கடை நீரைத் தள்ளினுல் - முத்துப் பல்லக்கில் பன்றியை சுமந்து சென்றுல் - நல்லவர்கள் மனம் எவ்வளவு புண் படுத்துமோ அதைப் போல - இன்று இயங்கி வரும் வானொலி நிலையங்களையும் அவைகள் ஒலி பரப்பும் 'மணியான நிகழ்ச்சிகளையும் எண்ணிப் பார்த்தால் - என் இந்த மார்கோனி இரவு பகல் கருதாமல் எதிர்ப்பையும் ஏசலையும் சகித்துக் கொண்டு - பலமுறை தோல்வி கண்டும் - இந்த வானொலிப் பெட்டியை கண்டு பிடித்தான் ; என்று கவலைப் படவேண்டியிருக்கிறது. வானொலி - நிலையங்கள் - இந்த அரிய சாதனத்தை சரியான முறையில் - பயன் படுத்த தவறுகின்றன :

இங்கிலாந்து வானொலி நிலையம் ஒன்றில் ஆங்கில நிகழ்ச்சியின் போது . பண்டைத் தமிழையும் பண்ணிகர் தெலுங்கையும் - துளுவையும் - மலையாளத்தையும் - கலந்து கலந்து ஒலிபரப்பிக் கொண்டிருந்தால் ; அந்த வானொலிப் பெட்டியை சம்மட்டி ஒன்றை எடுத்து உடைத்துப் போட்டு விட்டு போவான் வெள்ளையன் ; எந்தெந்த மொழி ஒலிபரப்பப் படுகிறதோ அந்தந்த சமயங்களில் முடிந்த அளவு அந்த மொழியையே கையாள - வானொலி நிலையத்தார் கட்டாயப் படுத்தவேண்டும். வானொலி நிலையங்களில் இருக்கும் சில நிரந்தர ஊழியர்கள் செய்திகளைப் படிப்போர் இசை எழுப்புவோர் - எல்லோருமே தமிழ் நிகழ்ச்சியின் போது முடிந்த அளவு தமிழிலேயே நிகழ்த்த வேண்டும்.

வாசித்தல், படித்தல், இந்த இரண்டில் ; வாசித்தல் - வட மொழி ; படித்தல் தமிழ் !

"செய்திகளை வாசித்தல்" என்று வானொலி நிலையத்தார் கூறுவதற்கு பதில் செய்திகள் படித்தல் என்று பண்டைத் தமிழையே கொள்வதில் தவருென்று மில்லை;

'சென்னை வானொலி . நிலையம்' வாய் நிறைந்த அழகு தமிழ் இது ; மதருஸ் கேந்திரம் ! இது என்ன அவசியமோ நமக்குத் தெரியவில்லை 'மதருஸ் . கேந்திரம் என்பதை விட்டு சென்னை நிலையம்என்று ஒலிப் பரப்பினுல் என்னவோ : விடாப்பிடியாக சென்னை நிலையத்தார் 'மதருஸ் கேந்திரம்' என்று தான் ஒலிபரப்பி வருகின்றனர் ;

இது தமிழர்களை புண் படுத்துவதாய் இருக்கிறது என்று தமிழறிஞர்கள் பன் முறை எடுத்துக் கூறியும் — சென்ற பாதையிலேயே சென்று கொண்டிருக் கின்றனர் ; அதோடு மட்டுமல்ல எந்த பொது நோக்கத்தோடு வானொலி சாதனம் ஏற்பட்டதோ; எந்த அடிப்படைக் காரணங்களுக்காக அமைக்கப் பட்டதோ அதன் முழுப்பயனை மக்கள் நுகர முடிவதில்லை ; உழைத்து உழைத்லுத்த வர்களுக்கு சங்கடப்பட்ட நெஞ்சங்களுக்கு களைப்பை"யும் - சலிப்பையும் போக்கி கொஞ்ச நேரமாவது இன்பமாகப் பொழுது போக்குவோம் என்று எண்ணுபவர்களுக்கு வானொலி நிலையங்கள் பொழுது போக்கைத் தருவதோடு மட்டும் மல்ல உலக நிகழ்ச்சிகளை நாளேடு வாங்கிப் படிக்க இயலாதோர் - வசதி இல்லாதோர் எல்லாம் உலகத்தையும் நாட்டின் அன்ருட நிகழ்ச்சிகளையும் தெரிந்து கொள்ளவும் - பொது அறிவு பெறவும் ஏற்ற சாதனமாக இருக்கவேண்டும் ; திருத்தி அமைக்கப் படவேண்டும் ; மேற்கண்ட நோக்குடன் பார்த்தால் இன்றைய வானொலி நிலையங்கள் ஏமாற்றத்தைத் தருகிறது நமக்கெல்லாம் ;

எந்தெந்த முக்கியமான சம்பவங்கள் - நிகழ்ச்சிகள் பாடங்கள் தெரிந்து கொள்ளவேண்டுமோ ; எந்த நிகழ்ச்சிகளை வெளியிடுவதால் நாட்டின் மனவளம் உயருமோ அந்த நிகழ்ச்சிகளையெல்லாம் விட்டு விட்டு 'திருப்பாவை' திருவெம்பாவை' மாநாட்டுச் செய்திகள் 'தக்காளி அல்வா எப்படி செய்வது' எந்த குழம்பிற்கு எவ்வளவு மிளகாய்ப் பொடி கலக்க வேண்டும். ரசத்திற்கு புளி போடுவதா - எலுமிச்சம் பழம் பிழிவதா என்பன போன்ற அடுக்களை செய்திகளைப் பரப்பி வருகிறது.

'ரசமும் - தக்காளி அல்வா'வும் செய்யத் தெரியாமலா இன்று மக்கள் அலைந்து கொண்டிருக்கின்றனர்; இப்பொழுது நாட்டின் தேவை இதுவா ! இதற்கா ஒரு வானொலி நிலையம் ; ஆயிரக் கணக்கில் பணச் செலவு ! 'ரசமும் - குழம்பும் ! எப்படித் தயாரிப்பது ! இதை நாட்டுக்கு எடுத்துச் சொல்ல ஒரு வானொலி நிலையம் ; ஒரு ரேடியோ மந்திரி பரிதாபம் ! பரிதாபம் !

இந்த அழகில் வேற்று மொழி வேண்டாத மொழி - விளக்கினும் புரியாத - புரிந்தாலும் பயன் படாத பயன் பட்டாலும் கவைக் குதவாத இத்தனையும் செய்தும் எட்டடோ - பத்தோ - பேர்தான் தெரிந்து கொண்டனர் என்ற விளைவிற்கு ; இந்தி பாடம் ; இப்படி யெல்லாம் வானொலி நிலையங்கள் பாதைமாறி விட்டன.

பஜனை மடங்களில் கேட்கப் படவேண்டிய கோஷங்கள் அனைத்தும் இப்பொழுதெல்லாம் வானொலிப் பெட்டிகளில் கேட்டு வருகிறது, வேத பாராயணங்களுக்கும் - வெத்துக் கூச்சலுக்கும் வானொலி சாதனம் இறையாகி விட்டிருக்கிறது.

'நேக்கு நோக்கு' என்ற தமிழ் கொலையைத்தவருமல் கேட்க முடிகிறது நிலையங்களில். டீ கடைகளெல்லாம் 'தேனீர் நிலையம்; தேனீர் விடுதி' என்று வேற்று மொழி நீக்கி பெயரைத் தமிழ் படுத்திக் கொள்கின்ற - மொழியுணர்வு காலம் இது. இருந்தும் கூட - தவறைத் தெரிந்திருந்தும்கூட, மாற்றங்காண முன் வரவேண்டும் ; அதுதான் அறிவுடமை.

தவிர ஒரு சாராருக்குத்தான் வானொலி நிலையங்களில் இடம் என்ற முறை மாறவேண்டும். 'பேனல் ஜட்ஜ்'ல் இருந்து, 'பியூன்' வரை - 'அவாள்' என்ற நிலை இருக்கக் கூடாது.

குறிப்பாக வானொலி நிலைய அட்வை சரி, கமிட்டியில் தலைவர், 'கல்கி' அசல் ஐயர்!

பேனல் ஜட்ஜுகளில் ஆறு ஐயர்கள் - சௌடய்யா - ஒரு கன்னடியர் - சித்தூர் சுப்ரமணியம் ஒரு தெலுங்கர் ; ராசமாணிக்கம் என்ற ஒருவர் மட்டும் தான் தமிழர் ! போதுமா - வகுப்புரிமை.

இரண்டாவது 'பேனலிலும்' நால்வரில் மூன்று ஐயர். **M. M.** தண்டபாணி தேசிகர் ஒரு தமிழர் இப்படி வானொலி நிலையங்களிலெல்லாம் 'சர்வம் ஆரிய மயம் ஜகத்' என்ற நிலை ஏற்பட்டு விட்டிருக்கிறது :

அரசியல் பணிமனைகளிலும் - ரயில்வே - அஞ்சலகம் போன்ற முக்கிய இடங்களில் தான் 'வம்சா வாரியாக' ஆரியம் வந்து கொண்டு இருக்கிற தென்ருல் இங்குமா இந்த வழக்கமான நிலை ;

இந்நிலையில் கிட்டத் தட்ட பதினறு வருடகால பாடகர்களாய் இருந்த பல தமிழ்ப் பாடகர்கள் (பி. அல்லாத) சுமார் எண்பது பேர் நீக்கப் பட்டிருப்பதிலும் - தொழிலின்று அலைவதிலும் வியப்பொன்று மில்லை.

A வகுப்பு பாடகர்களில் 125 ரு சம்பளம் பெற்று வந்த சில பிராமணப் பாடகர்களுக்கு சம்பளம் வேறு உயர்த்தப் பட்டிருக்கிறதாம் : இப்படி தமிழர்கள் பல துறையும் புறக்கணிக்கப் படுவது போதாதென்று வானொலி நிலையத்திலிருந்தும் பலகலைத் துறை - இசைத்துறை நண்பர்கள் விரட்டப் படுவதென்பது வேதனைதரக் கூடியதும் வளர விடக் கூடாத ஒன்றுமாகும்: இதைச் சரியென உணரும் தமிழர் அனைவரும் ஆவன செய்ய முன் வர வேண்டும்.

**வில்வம்**

★

## சிறு பொருள் விளக்கம் :

## ★ கறிவேப்பிலை ★

இது இந்திய உப கண்டத்தில் மிக்க ஏராளமாய் வளருகின்ற பெருஞ் செடியினம் காடுகளிலும் மலைகளிலும், வீட்டுக் கொல்லைகளிலும், தோட்டங்களிலும் பயிராகும். இதன் இலை ஒரு வித நறுமணத்தைக் கொடுக்கும். நம்மில் பெரும் பாலர் தங்கள் வீட்டில் செய்யப்படும் கறி வகைகளிலும் குழம்பு, மிளகு நீர், நீர் மோர் போன்ற திரவப் பொருள்களிலும் இதன் இலையை தாளிதமாய்ச் சேர்த்து உண்பார்கள். இதனைக் கறிவேப்பிலை, கருவேப்பிலை கறியபிலை எனவும் வழங்குவதுண்டு.

பயன்படும் உறுப்புகள். — இலை, ஈர்க்கு, பட்டை, வேர்.

சுவை.— சிறுகார்ப்பு வீரியம் — வெப்பம், பிரிவு — கார்ப்பு.

செய்கை.— உரமாக்கி ; பலகாரி ; பசித்தித்தூண்டி ; ஜடாராக்நிவர்த்தனி.

குணம். — கருவேப் பிலையால், அரோசகம், சீத பேதியால் வரும் வயிறுளைவு, பழஞ்சுரம், பயித்திய தோடம் ஆகிய இவை நீங்கும்.

வழக்கு.— இதன் இலை, பட்டை, வேர் இவைகளைக் கஷாய மிட்டுக் கொடுக்க பித்த சாந்தியாகும். வாந்தியும் நிற்கும்.

இலையை நிழலில் உலர்த்தி, இத்துடன் மிளகு, உப்பு, சீரகம், சுக்கு முதலியவற்றைப் பொடியாக்கிச் சோற்றில் கூட்டி கொஞ்சம் நெய் விட்டுப் பிசைந்து உண்ண மந்தம், மந்தபேதி, மலதோடம், மலக்கட்டு கிரகணி, பிரமேகம் இவை சாந்தமாகும்.

இலையுடன் சுட்ட புளி, வறுத்த உப்பு, வறுத்த மிளகாய் கூட்டித் துவையல் செய்து ஆகாரத்துடன் சாப்பிட, அரோசகம், அதிசாரம், செரி... பித்த வாந்தி, பித்தசயம், செரி... யாமை, வயிற்றுளைச்சல் இவைகள் குணமாகும். ஈர்க்கின் புறணியை முலைப்பால் விட்டு இடித்து இரசம் பிழிந்து, கிராம்பு, திப்பலி சேர்த்து 2, 3 தரம் குழந்தைகளுக்குப் புகட்ட வாந்தி நிற்கும். பசி தீபனத்தை உண்டாக்கும்.

அரிசியுடன் இலையைச் சேர்த்து உரலிலிட்டுக் குத்தித் தேய்த்துப் புடைத்துவிட்டு, அவ்வரிசியுடன் ஒரு பழுத்து உலர்ந்த மிளகாய் கூட்டிக் கருக்கி, சாந்துநிறம் வரும் பக்குவத்தில், வசம்புச் சாம்பல், சிறு நாகப்பூ; அதிவிடயம் இவைகளை சேர்த்து நீர் விட்டுச் சுண்டக் காய்ச்சிக் கொடுக்க அசீரண பேதி முதலியன நீங்கும்.

இதன் ஈர்க்குடன் வேப்பீர்க்கு நெல்லியீர்க்கு சேர்த்து இடித்து நீர் விட்டுக் காய்ச்சிக் கொடுக்க வாந்தி உடனே நிற்கும்.

மேற்படி இலையில் சிறிதும் வயதுக்குத் தக்கபடி 1, 3 மிளகும் சேர்த்து நெய்யில் வறுத்து வெந்நீர் விட்டு அறைத்துக் கரைத்துப் பாலர்களுக்கு நீராட்டிய பின் குடிப் பித்த மந்தம் முதலியன நீங்கிப் பசியை உண்டு பண்ணும்.

★



# இரு உலகின் உரையாடல்

ரோம் நகரில் அன்று ஒரே பரபரப்பு. மக்கள் இங்கு மங்குமாக அலைந்து கொண்டிருந்தனர். எவர்வாயும் மூடி இருக்க வில்லை ; கிழவர்கள் கூட்டம் கூட்டமாக ஆங்காங்கே நின்று ஏதோ 'குசு, குசு' வென்று பேசிக் கொண்டிருந்தனர் : பொதுவாக அந்நகர மக்கள் ஏதோ ஒரு விபரீதத்தை எதிர் நோக்கிக் கொண்டிருப் பவர்களைப் போலக் காணப்பட்டனர்.

ரோம் நகரின் அக்காலத்து உயர் நீதி மன்றமாய் விளங்கிய மினர்வா மடாலயத்தில் மத விசாரணை சபை கூடிற்று. வாலிபர்கள் - வயோதிகர்கள், அரசியல் வாதிகள் தொழிலாளர்கள் ஆக அத்தனை பிரிவினரும் மடாலயத்தை நோக்கி விரைந்து கொண்டிருந்தனர். மடாலயத்திற்கு உள்ளேயும் வெளியேயும் ஒரே மக்கள் வெள்ளம். உயர்ந்த மேடைகளின் மேல் போடப்பட்டிருந்த விலை மிகுந்த ஆசனங்களில் — ஆண்டவனின் நேர்வாரிசுகள் என்று நம்பப்பட்டு வந்த மத குருக்கள் அமர்ந்திருந்தனர்.

அந்த சபையின் நடுவில் அறுபத்தொன்பது வயதைக்கடந்த வயோதிகன் குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தி வைக்கப் பட்டிருந்தான். உடல் மெலிந்து நடை தளர்ந்து உரு மாறிப் போய் இருந்தான் அக் குற்றவாளி. மூப்பின் அணைப்பினுல் அவன் முகமெங்கும் சுருக்கங்கள் காணப்பட்டன. இமைத் தோல்கள் அவன் விழிகளைப் பாதியளவு மறைத்துக் கொண்டிருந்தன. இந்தத் தள்ளாத வயதிலும் அவன் முகத்தில் ஒரு பொலிவு ! தெளிவு இருந்தது : சிந்தனைக் கீற்றுகள் முகத்தில் நிழலாடிக் கொண்டிருந்தன. அந்தக் குற்றவாளி வஞ்சகம் வழியும் - குருமார்களின் முகங்களையே மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

'பாவிகள் என்ன தீர்ப்புக் கூறப் போகிருர்களோ - என்ன தண்டனை கிடைக்குமோ இந்தத் தள்ளாத காலத்தில் என்ற ஏக்கம் - துக்கத்தைத் தூண்டிவிட - நடு நடுங்கிக் கொண்டிருந்தார் அந்த முது கிழவர். சபையில் அமைதி நிலவியது. பட்டாடை தரையில் புரள - பரிமளம் வீச - தண்டெடுத்தோர் பின் தொடர - கட்டியங் கூறுபவன் கட்டிமுன் செல்லபாதக் குரடு 'டக் டக்' என்ற ஒலி எழுப்ப பருத்த மனிதர் ஒருவர் சபைக்குள் நுழைந்தார். அவர்தான் தலைமை மதகுரு. சபையினர் எல்லாம் எழுந்து உட்கார்ந்து தங்கள் மேலான மரியாதையை செலுத்திக் கொண்டனர்.

மதகுரு தனக்கென இருந்த பொன்னுசனத்தில் வந்தமர்ந்தார். பல்லாயிரம் விழிகள் மதகுருவையே உற்று நோக்கின !

ஆனுல் அந்தக் கிழக் குற்றவாளி மட்டும் ஒன்றும் புரியாமல் வியப்பாலும் - பயத்தாலும் - வியர்த்துப் போய்' 'திரு திரு' வென்று விழித்துக் கொண்டிருந்தான்.

"ஏ ! நாத்திகனே ! நீ என் இங்கு நிறுத்தப் பட்டிருக்கிருய் காரணம் தெரிந்து கொண்டாயா?"

"விளக்கம் கூருமலேயே என்னை இங்கு கொண்டு வந்தார்கள்".

"விளக்கம் வேறு வேண்டும் உன் பிறவியே—தலைக் கனமடா உனக்கு ... !

"என்ன சொல்கிறீர்கள் ... ...

"நாசகாலனே!ஆண்டவனையும், அவர் தூதர்களான எம்மையும் - நாம் வளர்க்கும் மதத்தையும் - வேதத்தையும் சந்தேகித்தாய் - சமாதானம் என்ன கூறுகிருய் இதற்கு ... ?

"சிந்தித்தேன் - சரியெனப் பட்டசில கருத்துக்களைக் கூறினேன். நான் கண்ட புதுமைகளை நூல் வடிவாக்கினேன் - கூடாதா - குருமார்களே ? "

" நியாயம் கேட்கிருயா - என்ன நாத் துணிவு - அரிஸ்டாடில் அறிந்து கொள்ளாத புதுமை - வேத நூல் விளக்காத உண்மை - எங்கள் சக்திக்கு அப்பாற்பட்ட ஞானம் ! உனக்கு மட்டும் எப்படியடா உதித்து விடும் ? பித்தம் தலைக்கேறி ஏதேதோ உளறிக் கொட்டி இருக்கிருய் உன் ஏடுகளில் ! "

" உளரலா ... அய்யய்யோ ' அவைகள் அனைத்தும் உண்மை பிரபு ...! உயிரைப் பயணம் வைத்து உழைத்திருக்கிறேன் அவைகளுக்காக. பூமி தான் சூரியனைச் சுற்றுகிறது சூரியன் அல்ல!"

'அபசாரம் ! அபசாரம் ! ஆண்டவன் பெயருக்கே அபகீர்த்தி - யார் அங்கே! இந்த கடைபிறப்பை இருட் குகையில் தள்ளுங்கள் - சித்திர வதை செய்யுங்கள் ! அவன் கண்டு பிடிப்புகள் எல்லாம் பொய் என்று அவனே ஒப்புக் கொண்டால் விடுதலை. இல்லா விடில் அவன் உயிருக்கே இங்கிருந்து விடுதலையளியுங்கள்"— பயங்கரக் குரலில் குருசுவாமிகள் தீர்ப்பளித்தார். உடனே இரண்டு தடினிதர்கள் அந்தக் கிழவரைச்சிறையில் தள்ளினுர்கள்.

**ஏ. கே. வில்வம்**

" வேண்டாம் குருமார்களே வேண்டாம் ! கிழவன் நான் ... எனக்கிந்தக் கொடுந் தண்டனை தகாது ... என் கண்டு பிடிப்புகள் அனைத்தும் உண்மை ... உண்மை!" முழுக்க முழுக்க உண்மை ! அந்தக்கிழக் குற்றவாளியின் குரல் சிறைக் கோட்டத்தில் எதிரொலித்துக் கொண்டிருந்தது.

இப்படி இம்சைக்கு ஆளான அந்த இலட்சிய வாதியின் பெயர் தான் கலிலியோ ! கல்லடி பட்டான் கலிலியோ என்று சொல் கூட்டிப் பேசுகிருர்களே —அந்தப புகழுக்குரியவன் தான் இவன் ! இதாலி நாட்டிற்கே எழிலைத் தந்து கொண்டிருந்த 'பைசா' நகரில் 1564 ல் அறிவிற் சிறந்த ஆனுல் வறிய குடியில் பிறந்தான் : வளர்ந்தான்.

" " "

மகன் டாக்டர் பட்டம் பெற்ருல் தான் தங்கள் தீவிர தரித்திரம் தொலையும் என்று கருதிய கலிலியோவின் தந்தை மருத்துவக் கல்லூரியில் சேர்த்துபடிக்கவைத்தார்.

ஆனுல் கலிலியோ காவியம் படிப்பதிலும் ஓவியம் தீட்டுவதிலும் - இசை பயில் வதிலும் எண்ணங்களைத் திருப்பி விட்டான் :

ஒரு நாள் தற்செயலாக அந்த ஊர் மாதா கோவிலுக்குச் சென்ருர். மக்கள் மண்டியிட்டு அன்னையைத் தொழுது கொண்டிருந்தனர் ; ஆலயத்தில் நுழைந்த கலிலியோ - மண்டியிடவும் இல்லை அன்னையைத் தொழவும் இல்லை ; அவர் கவன மெல்லாம் அங்கே தொங்கிக் கொண்டிருந்த ஒரு பெரிய விளக்கின் மேல் விழுந்தது. அந்தப் பெரிய விளக்கு ஆடி அசைந்து கொண்டிருந்தது : ஆட்டத்தின் வேகம் மிகுந்தாலும் - குறைந்தாலும் - ஆட்டத்திற்கான நேரம் ஒரே அளவாக இருப்பதைக் கண்டார். அந்தக் காட்சி அவர் கருத்தில் ஒரு புதுமையைத் தூண்டியது. எத்தனையோ இரவு பகல் தொடர்ந்து சிந்தித்தார் - உணவின்றி - உறக்கம் மறந்து உடல் இன்பங்களைத் துறந்து. அந்த அவரின் சலியாத உழைப்புதான் ; இன்று நாம் சுவற்றிலே மாட்டி மகிழும் 'காலப் பொறி' யை(**clock**) தந்தது.

இதன் பிறகு பல ஆண்டுகள் பெரும்பாடுபட்டு நோயாளியின் உடல் வெப்பத்தை அளக்கும் 'தெர்மா மீடர்' என்னும் கருவியை மருத்துவ உலகிற்கு அளித்தார் அந்த விஞ்ஞானி. அதன் பிறகு அந்த சர்வகலாசாலை ஒன்றில் விரிவுரையாளராக பணியாற்றினுர்.

அந்தக் காலத்தில் உலக அறிஞர்களில் ஒருவர் எனக் கருதப் பட்ட அரிஸ்டாடில் (**Hristadil**) என்பர் எழுதிய நூல்களுக்கு உலகின் எப்பகுதியினின்றும் எதிர்ப்பு கிளம்பிய தில்லை.

அறிஞர் பலரும் அவரின் கருத்துக்களை அப்படியே ஏற்றுக் கொண்டிருந்தனர்.

இரண்டு பொருள்கள் ஒரே உயரத்தில் இருந்து விழுந்தால் அவற்றுள் கன பொருள் தான் முதலில் தரையை அடையும் என்ற அரிஸ்டாடலின் கொள்கையை சுமார் 2000 ஆண்டுகளாக எவரும் மறுத்தாரில்லை.

நம் கலிலியோ அந்தத் தத்துவத்தை வைத்து பல ஆண்டுகள் ஆராய்ச்சிசெய்தார். முடிவில் அரிஸ்டாடலின் அந்த தத்துவம் தவறு தான் என்ற முடிவிற்கு வந்தார்.

"எந்தப் பொருளும் சம உயரத்திலிருந்து விழுந்தால் ஒரே சமயத்தில் தான் தரையை அடையும்" என்று முடிவு கட்டி தன் முடிவை ஊராருக்கு எடுத்துரைத்தார்.

ஓதலுக் கெல்லாம் மறுப்புரைக்கும் அருமை மக்கள் ஏற்பரா இதனை ! கலிலியோ ஒரு பித்தன் என்று எக்கொலி கொட்டி நகைத்தனர் அரிஸ்டாடலின் பக்தர்கள் வேறு தூற்றத் தொடங்கி விட்டனர். கலிலியோவின் தூய உள்ளம் மக்களின் அறியாமையைக் குறித்து வருந்தியது. எதிர்த்தவர்களில் சிலரை கோபுரமொன்றிற்கு அழைத்துச் சென்ருர் கலிலியோ ; அவர்களைக் கீழே நிறுத்தி விட்டு கோபுரத்தின் உச்சிக்கு ஏறினுர் : இரண்டு இரும்பு குண்டுகளை அங்கிருந்து ஒரே சமயத்தில் விழச் செய்தார் : அந்த இரண்டு குண்டுகளும் ஒரே நேரத்தில் தரையை அடைந்தன.

தெளிவில்லா நெஞ்சங்கள் தெளிந்திருக்கும் என்ற நம்பிக்கையுடன் 'சரிதானே என் கருத்துக்கள் என்று நம்பிக்கையோடு கேட்டார் — கீழிருந்தவர்களை பார்த்து.

'ஏதோ சூது இருக்கிறது : வேறு காரணம் ஏதாயினும் இருக்க வேண்டும். அரிஸ்டாடலின் கருத்துக் கள் பொய்யாமோ ... இவன் ஒரு மாயக்காரன் என்று முணுமுணுத்தப் படியே அந்த மனிதர்கள் நடந்தார்கள் :

வெந்த உள்ளத்தோடு வீடு திரும்பினுர் கலிலியோ !

மாறுபட்டார் வேறு பட்டவராகவே இருப்பது சகஜ மல்லவா ! அன்று முதல் அரிஸ்டாடலின் கொள்கைகளை பின்பற்றுபவர்கள் முடிந்தவரை கலிலியோவிற்கு தொல்லை தந்து கொண்டிருந்தனர்.

இந்த நேரத்தில் தான் அவரை வறுமை இருள் சூழ்ந்து கொண்டது ; பெருஞ் சுழலில் சிக்கிய படகென தத்தளித்துக் கொண்டிருந்தார் ; குடும்பத் தொல்லை இவரை வாட்டி வதைத்துக் கொண்டிருந்தது. இந்த கொடுமை சகிக்க முடியாமல் 'பாதுவா' நகரில் ஒரு ஆசிரியர் தொழிலை ஏற்றுக் கொண்டார்.

அந்தக் காலங்களிலும் ஆசிரியர்கள் என்ருல் சமுதாயத்தின் கீழ் படியில் வைத்தே எண்ணப்பட்டு வந்தனர். வருவாய் போதாமல் கலிலியோ வீடு வீடாகச் சென்று பாடம் சொல்லி - எளிய வாழ்வில் நலிந்து கொண்டிருந்தார். அந்நிலையிலும் பல அரிய நூல்களை எழுதிக் குவித்துக் கொண்டிருந்தார்

1609ம் ஆண்டு 'தொலை நோக்கி' (**Telescope**) கண்டு பிடித்தார் ; அந்த அரிய படைப்பின் மூலம் வானின் அற்புதங்கள் பல வற்றை அறிவதற்கான வாய்ப்புகளை விஞ்ஞான உலகு பெற்றது. கலிலியோவிற்கு பல விஞ்ஞானிகள் அறிமுகமானதும் - பாராட்டியதும் இப்பொழுது தான் : கலிலியோ இந்தக் கருவியின் துணை கொண்டு சந்திர மண்டலத்தை ஆராய்ந்து பூமியில் உள்ளதைப் போலவே - சந்திர மண்டலத்திலும் மலைகள் உள என்று கூறினுர்.

சந்திரனைக் கடவுள் என்று நம்பிக் கிடந்த மக்கள் இவர் கூற்றை புறக்கணித்தனர். இப்பொழுதுகலிலியோவிற்குப் பல புதிய எதிரிகள் கிளம்பினர் பழைய விரோதிகளின் பகை மேலும் வளர்ந்தது, 'இவன் ஒரு மத துரோகி - நாத்திகன் இவனை எப்படியும் தொலைத்து விடு

(10-ம் பக்கம் பார்க்க)

## விசித்திரம்

ஐக்கிய அமெரிக்காவைச் சேர்ந்த லாஸ் ஏஞ்செல்சில், 56 வயதுடைய சாமுவேல் பம்மெல் என்பவன், தன் மனைவி மீது ஒரு வழக்குத் தொடர்ந்தான்.

வழக்கின் சாராம்சம் இதுதான் :—"என் மனைவி என்னை மற்றொரு பெண்ணுக்கு ஒரு வருடகாலம் விட்டு, அதற்கு 3,000 பவுன் வாடகை வாங்கியிருக்கிருள், அதில் பாதி எனக்குக் கிடைக்க வேண்டும்."

One side of the page is dark

# ஆயிரம்தீவு அங்கயற்கண்ணி

## முன்னுரை

சரித்திரம் படிக்கும் மாணவனுக்கு சுலபத்தில் பைத்தியம் பிடிக்கச் செய்யவழி, அவன் முன், தென்னாட்டு வரலாறுகளை நீட்டுவதேயாகும்! பல ஆராய்ச்சியாளர்களும் ஒருவர்க் கொருவர் பெருத்தமாறுபாடு கொள்கிறார்கள். ஒருவன், கி.பி. பத்தாம் நூற்றாண்டில் இருந்தான் என்று ஒரு ஆசிரியர் குறித்தால், அதே ஆள் பதினைந்தாம் நூற்றாண்டில் இருந்ததாக இன்னொருவர் உடும்புப் பிடியாகப் பிடிக்கிறார். ஐநூறுவருட வித்தியாசம் சரித்திர ஆராய்ச்சியாளர்களுக்கு மிகவும் சாதாரணம். அதுவுமன்றி, ஒருவர் எழுதிய சரித்திரம், 'இன்னார் மனைவி இன்னார்' என்றுரைத்தால், அதைப்பற்றி இன்னொரு சரித்திரம், "அவன் தாய் தான் அவள்" என்று கூறுகிறது. தாய் தாரமாகவோ, தாரம் தாயாகவோ, ஆராய்ச்சியாளர் கண்களில் காட்சியளிப்பது, பல நூற்களில் காணக்கிடக்கிறது.

இந்த நிலையிலேதான், நான் சரித்திரப் பின்னணியோடு தொடர்கதை துவங்குகிறேன். இதிலே ஒருபொதுவான—என் அறிவு ஒப்பிய—ஒரு வழியை வகுத்துக் கொண்டு செல்கிறேன். ஆயினும், ஒரு ஆராய்ச்சியாளனோடு நான் ஒன்றுபட்டால், வேறொருவனோடு முரண் படுவதைத் தவிர்க்க முடியவில்லை. இந்தக் கதையில், அன்று வாழ்ந்தவர் பலரோடு, நானும் சிலரைப் பெற்றெடுத்து விட்டிருக்கிறேன்.

இதன் படுதாவும் ஒருபகுதியும் சரித்திரமே ஒழிய, முழுக் கதையும் சரித்திரம் அல்ல. முழுக்க முழுக்க சரித்திர நிகழ்ச்சிகளோடு கதையைக் கலந்து விட்டிருக்கிறேன். திடீரென்று ஒரு இடத்தில், "இவர் யார்?" என்ற கேள்விபிறந்தால், சரித்திரத்தைப் புரட்டாதீர்கள்; நான் சொன்னதை மட்டும் படியுங்கள்!

ஆயினும், காலம், பொது நிகழ்ச்சி—ஆகியவை சரித்திரத்தை அணைத்துக் கொண்டுதான் செல்லும்.

இதுபோன்ற பின்னணி ஓவியங்கள் பலவற்றை, சரித்திரம் என்றே கண்டு பலர் மயங்குவதை நான் அறிவேன். அந்த மயக்கம் எந்தக்கதையில் ஏற்படுகிறதோ, அந்தக் கதைதான் முழு இலக்கணத்துடனும் வரையப்பட்ட கதை என்று கொள்ள முடியும்.

அப்படிப்பட்ட ஒரு கதையை உங்களுக்குத் தரவே, நான் விரும்புகிறேன்; முயற்சிக்கிறேன்.

*கண்ணதாசன்*

## 1

### காதலர் களம்புக, மாதவள் மனங்கெட...

மாயக்கலவி மணந்தகன் றூர்திரு மார்பகலம்
தோயப்பெறுது சுடுகின்ற மேனி துறந்தவர்தாம்
ஆயத்துநின்று வருந்திய என்னை அணைத்தணைமேல்
சாயக்குளிருமின் றேயவர் சாரற் றழைப்படுத்தே!

—அம்பிகாபதி, கோவை.

கி. பி. 1015...

படை புறப்படுகிறது; குதிரைகளின் காலடிச் சப்தம் சோழன் தலைநகரை ஒலிமயமாக்குகிறது. யானைகளின் பிளிறல் காதைத் தாக்குகிறது. வீரகோஷங்கள் வேறு இந்தச் சப்தங்களைப்பெரிதாக்குகின்றன. அணிவகுத்துச் செல்லும் படை தலைநகரின் ஒவ்வொரு தெருவிலும் நுழைகிறது. எட்டாம் தெருவில் வரும் படையின் கடைசி ஆள் முதலாம் தெருவில் வந்துகொண்டிருக்கிறான். அத்தகு பெரும் படை! மன்னன் இராசேந்திரன் கம்பீரமாக, யானையின்மீது அமர்ந்திருக்கிறான். அன்னையரும் இளமங்கையரும் தூவிய மலர்கள் அவன் சிரசில் தங்கி, பகைவனின் தலைகள் உதிருவதைப்போல் உதிர்கின்றன. முத்துத்தோரணம் கட்டினாற்போல அணியாக நின்ற மாதர்களின் புன்னகை, வரப்போகும் வெற்றியை முன்கூட்டி அறிவித்தன.

"எம் இறை வாழ்க!

மன்னர் வாழ்க!"

திடீரென்று, படையின் நடுப் பகுதியில் ஒரு வீரன் தன் குதிரையை நிறுத்துகிறான். அதற்குப் பின் உள்ள படைகள் திகைத்து, நிற்கின்றன. அவ்வீரன் தளநாயகன் தலைநிமிர்ந்து பார்க்கிறான். அங்கே மேல்மாடத்தில் ஒரு மெல்லி நல்லாள், தன் அதரக் கதவுகளால் பல் முத்தங்களை மூடி மூடித் திறக்கிறாள். அவளது கண்கள், 'உலக மகா காவியம்' எழுதி அவன் கையில் ஒப்படைக்கின்றன. அவன் விடை கேட்பதுபோலப் பார்க்கிறான்; அவள் "விடமாட்டேன்" என்பதுபோலப் பார்க்கிறாள். அவன் தன் வயமிழந்து குதிரையைத் தட்டுகிறான். குதிரையோ, அந்நிலை கெடுக்க விரும்பாது, அசைய மறுக்கிறது. பின்வந்த வீரர் பேதலிக்கின்றனர். கண்வந்த வழியைச் சாத்தக் கதவொன்றுமிலையே! ஒரு வீரன் துணிகிறான்; தளநாயகனின் முதுகில், மெல்ல தன் வேலால் குத்துகிறான். கண்வேல் பட்டகாளை, கைவேல் பட்டதும் தன் நினைவு பெறுகிறான். குதிரையைத் தட்டுகிறான். பறக்கிறது குதிரை! படைகள் தொடர்கின்றன! புழுதிப்படலம் எழுகிறது! காட்சி மறைகிறது... படை, நகரின்எல்லை கடந்துவிட்டது.

கடந்ததும் அறியா மங்கை அப்படியே நிற்கிறாள்.

**என்னிவள் உருவம் கொல்லோ!**
**எழுதினான் எவனோ? அன்னான்**
**மன்னவன் சிலைவடிப்பில்!**
**மற்றென்ன சொல்வேன் ஈண்டு!**

அசையாது நிற்கும் அழகியின் பின்னே வரையாத ஓவிய வடிவத்தாள் ஒருத்தி, இருநாழியாக நிற்கின்றாள்; பார்த்தாளா, கோதை! நின்று நின்று பார்க்கிறாள், அந்த நீலவிழிக் கோலமயில்! திரும்பவில்லை, இந்த தேன்வண்ண மேனியாள்! பார்த்தாள், வந்த பாவை; கனைக்கிறாள்...

அவள் கனைத்தது, இவளுக்கு, தன் காதலன் ஏறிப்போன குதிரையின் கனைப்பு, சிறிதாகி வந்து மோதுவதுபோல் இருக்கிறது... திரும்பாமலிருக்கிறாள்!

அவள், 'நந்தினி' என்று அழைக்கிறாள்!

இவளுக்குத் தன் காதலன் குரலாகக் கேட்கிறது!

உடனே அவள் மெல்ல வந்து "சீர்மிகும் செல்வி, தென்னவன் கோதை நந்தினி தேவியார் வாழ்வதாக! தேவீ! நினது பாதாரவிந்தத்தில் ஒரு பக்தை பல நாழியாகக் காத்திருக்கிறாள்! கடைக்கண் திறந்து பாராயோ! உன் கருணைக் கடலைத் தாராயோ மலர்வண்ண மாதே! மங்கையர் திலகமே! காப்பதுன் பாரமம்மா!"

என்ன பேசியும் அசையவில்லை, அவள்!

புதுத்திட்டம் போடுகிறாள், வந்தவள்.

நந்தினியின் காதருகில் வந்து "என் கண்ணே! கொடியில் முளைத்த கத்தரிக்காய்போல், என் மனதில் முளைத்த மாதே! உன்னை மடியில் பறித்துக்கொண்டுபோய் சமையல் செய்து சாப்பிட ஆசைப்படுகிறேன்! என் கோமளமே! என் மயிலே! இன்னும் என்னென்ன உண்டோ அவ்வளவே! உன் காதலன் வந்திருக்கிறேன்பார்! பார்க்கமாட்டாயா, என் பங்கயமே!" என்கிறாள்.



அதற்கும் அவள் அசையவில்லை.

உடனே அவள் அப்படியே கைத் தாங்கலாக அணைத்துக் கொண்டு போய், படுக்கையில் படுக்கவைத்து உடம்பைத் தொட்டுப் பார்க்கிறாள் தோழி மரகதம். "ஐயோ! உடம்பு கொதிக்கிறதே!"

"நந்தினி! ஏன் இப்படி! அடி பைத்தியமே!

சோழநாட்டிலே, போர் கண்டு கலங்கும்பெண் ஒருத்தி இருப்பதே தவறு! போருக்குச் செல்லும் உன் காதலன் திரும்பிவரும்பொழுதுஅவனுக்குப் பரிசு வழங்குவது பற்றிய எண்ணம்தான் உனக்கு இருக்க வேண்டும். போர் என்றால் சாவு இருக்கும். ஆனால் நம்மவர்கள் சாவது குறைவாகத்தான்இருக்கும். கவலையைவிடு"

நினைவு கொண்ட நந்தினி, "இல்லை, மரகதம், காணாமற் போன என் அன்னையைப் பற்றி, பின்னால் வந்த சேதியெல்லாம் அவளை, கயவர்கள் இடைதுறைநாட்டுப் பக்கம்தான் கொண்டுபோனதாகக் கூறின. அதுமுதல், அந்தத் திசையை நினைந்தாலே எனக்குக் கவலை அதிகரிக்கிறது. என் சொல்வேன் மரகதம்! வழி அனுப்பும்போது புன்னகைத்தேன். மறைந்ததும் சஞ்சலப்படுகிறதடி, மனது! வாழவேண்டும்; அவர் மீளவேண்டும். என் மனங் குளிர வேண்டும்."

"எல்லாம் நடக்கும். அலட்டிக் கொள்ளாதே!" என்று அவளைப் போர்த்திவிட்டு நடக்கிறாள், மரகதம்.

"அத்தான்" என்று வாய்விட்டுக் கதறிய நந்தினி தலையணையில் முகங்கவிழ்த்து விம்முகிறாள். புயலுக்குப் புன்னை குலுங்கியதுபோல, அந்தப் பூச் சிரிப்புக்காரி குலுங்குகிறாள். அழுவாரின் உள்ளம் ஆற்றுவார்க்கில்லை. ஆற்றுவார்க்காக அடங்கவா முடியும்?

புறத்தில் ஆடிய பூவும், அவள் அகத்தில் ஓடிய எண்ணங்களுக்காக வாடி தலையணையில் உதிர்ந்தது.

★

## 2

### இடைதுறை நாட்டில் இளவல்...

ஒருவர்க்(கு) ஒருவாய் கொண்டுரைக்க
ஒண்ணாதேனும் உண்டாகுஞ்
செருவைச் சிறியேன் விண்ணப்பஞ்
செய்யச் சிறிது கேட்டருளே!

—கலிங்கத்துப்பாணி

இந்தநேரத்தில் சோழநாட்டின் வரலாற்றைக் கொஞ்சம் முன்னம் போய்ப் பார்க்கவேண்டும்.

தஞ்சைக் கோயிலைக் கட்டிய இராசராசன், பண்டும் வென்று, தென்னாட்டின் புகழைப் பல இடத்தும் நிலை நிறுத்தியவன். 'காந்தளூர்ச் சாலை கலம் அறுத்தருளிய சோ இராசகேசரிவர்மன் என்பர் அவனை. சேரநாட்டில், திருவனந்தபுரத்தின் ஒரு பகுதியாக வலிய சாலை என்ற பெயரில் இன்று விளங்கும் காந்தளூர்ச் சாலையில்தான் இராசராசனது முதற்போர் துவங்கிற்று. இந்தப் போர், மானங்காக்க நடந்த போராகும். அப்போது சேர நாட்டைஆண்ட பாஸ்கர ரவிவர்மன் இராசராசனின் தூதனை அவமதித்தான் எனக் கேள்விப்பட்டு இராசராசன் போருக்கெழுந்தான். நாகர்கோயிலுக்கு வடமேற்கே உள்ள உதகை என்னுமிடத்தில் அந்தத் தூதன் சிறை வைக்கப் பட்டிருந்தான். போர் துவங்கி, சேரமன்னனின் கடற்படைகள் அழிக்கப்பட்டன. பிறகு 'விழிஞம்' என்னும் இடத்திலும் போர் நடந்து சேரர்கள் தோற்றனர். இந்தப் போர் கி.பி.988-ல் நடந்தது எனச் சிலர் கூறுகின்றனர்.

அதன் பிறகு இராசராசன் கொல்லம், குடமலைநாடு முதலியனவற்றைத் தாக்கி வென்றான். சேலம், வடஆர்க்காடு, பெல்லாரி, கோலார், தும்கூர் என்னும் மாவட்டங்களை உள்ளடக்கிய நுளம்பப்பாடி என்னும் இடத்தையும் இராசராசன் வென்றான். கங்கவாடி, அதன் தலைநகர் களக்காடு, மைசூர்ப்பகுதியாகிய தடிகைபாடி முதலியன இராசராசன் வசம் வந்தன. இலங்கைத் தீவு முழுமையும் அதன்பின்னர் இராசராசன் ஆளுகைக்குட்பட்டது. பிறகு சீட்புலி, பாகி ஆகிய நாடுகளை வென்றான் இராசராசன். அதன் பிறகு கிருஷ்ண நதிக்கரையொடு தொடர்ந்த வேங்கி நாட்டை வென்று, அதை அந்த நாட்டு இளவரசனை விமலாதித்தனுக்கே கொடுத்துவிட்டு, அவனுக்கு தன் மகள் குந்தவையையும்மணம் செய்துகொடுத்தான்.

இறுதியாக இராசராசன் கொண்ட வெற்றி, இப்போது 'மால்தீவ்' என வழங்கப்படும் '**முந்நீர்ப்பழந் தீவு பன்னீராயிரம்**' வென்றதாகும். இந்தத் தீவுகளை இன்றும் '**ஆயிரம்தீவுகள்**' என்று கூறிவருகிறார்கள்.

இந்தப் போரின் காலம் சரியாக கி.பி. 1000 என்று கூறப்படுகிறது.

அதன் பிறகு, கி.பி, 1014-ல் இராசராசன் உயிர் நீத்தான், அதற்கு இரண்டாண்டுகட்கு முன் தான், இளவரசன் இராசேந்திரன் பட்டம் சூட்டப்பட்டான். பட்டம் சூட்டப்பட்ட இரண்டாம் ஆண்டில் தான் இராசேந்திரன், இடைதுறை நாட்டின் மீது போர் தொடுத்தது. ஆகவே ஆயிரம் தீவுகள் சோழர் வசப்பட்டு பதினறு ஆண்டுகள் ஆகின்றன, நாம் நிற்கும் கட்டத்தில்.........

" " "

**வடபெண்ணை** அருகில் இராசேந்திரன் படைகள் ஓய்வு கொண்டன. அலுப்புற்ற குதிரைகள், யானைகள் முதலிய வற்றைக் காட்டிலே அவிழ்த்து விட்டு விட்டு, படைவீரர்கள் கூடாரம் அடிக்கத் தொடங்கினர். படையின் ஒரு பிரிவான '**நல்லடிஅணி**' யின் தலைவன்தான தளநாயகன். தளநாயகனது தாயகம் மேலைச்சளுக்கிய நாடாகும். மேலைச்சளுக்கிய மன்னனாயிருந்த **தைலபன்**, தன் பட்டத்துராணியோடு மறு மூன்று மனைவியரும் கொண்டிருந்தான். அதில் ஒருத்தி சோழநாட்டுக் குடிமகன் ஒருவனின் மகள்; பெயர் **மங்கை**. அவள் மீது தைலபன் அளவுகடந்த காதல் கொண்டிருந்தான். இது கண்டு பொறுத பட்டத்துராணியும் மற்றையோரும், அரண்மனை ஏவலாட்கள் மூவரும் மங்கையையும், அவளது கைக் குழந்தை தளநாயகனையும் காட்டில் கொண்டுபோய் விட்டுவிடச் செய்தனர். வடபெண்ணை ஆற்றின் கரையில் அநாதைகளாகத் தவிக்கும்படி விடப்பட்டனர், தாயும் சேயும்.

மங்கை, கதறி அழுதாள். இந்தச் சூதை அவள் என்றுமே எதிர் பார்த்தவளல்ல. இதனை அறிந்த தைலபனும் அதே ஏக்கத்தில் மாண்டுபோனான். அனாதையான மங்கையை **புலவர் வாழியாதன்** என்பார் காப்பாற்றினார். ஆசிரமம் போன்றதொரு இடத்திலே மங்கை தன் மகனோடு வாழ்ந்து வந்தாள். புலவர் இறந்ததும் மங்கையும் தளநாயகனும் சோழநாடு வந்தனர். சோழநாட்டில் தளநாயகனுக்கு இருபது வயதாகும் போது, மங்கை இறந்தாள். தளநாயகன், இராசராசன் படையில் சேர்ந்து, அப்போது பட்டம் கட்டப் படாமலிருந்த இளவரசன்இராசேந்திரனின்உயிர்த் தோழனானான். இராசராசன் மறைந்து, இளவரசன் இராசேந்திரன் அரியணைக்கு வந்ததும் தளநாயகன் '**அணித்தலைவன்**' ஆனான்.

" " "

கூடாரத்தில் சாய்ந்தபடி தளநாயகன் சிந்தனையில் ஆழ்ந்தான். வெளியில் மற்ற வீரர்கள் உல்லாசத்தில் ஆழ்ந்திருந்தனர். பாட்டும் கூத்தும் அங்கே ரணகளப்பட்டன. ஆடலழகியர் சிலரை, படையுடன் கூட்டிச் செல்லும் வழக்கப்படி, இராசேந்திரன் படையோடும் வந்திருந்த மாதர்கள் ஆடினர். அதைக் காணவேண்டும் என்கிற எண்ணமே தளநாயகனுக்கில்லை. அவனது சிந்தனை, நந்தினியிடமே நின்றது. அவளைப்பற்றிச் சிந்திப்பதிலேயே அவனுக்குத்தனி மகிழ்வு. அந்த சிந்தனைக்கு வெளியில் நடக்கும் கூத்து, பெரும் இடையூறாகத் தோன்றிற்று அவனுக்கு. மெல்ல எழுந்துநடந்தான்.

நல்ல கருக்கிருட்டு; பலகூடாரங்களின் முன்பும் நடப்பட்டிருந்த தீப்பந்தங்கள் தங்களால் முடிந்த அளவு அவனுக்கு வழிகாட்டிக் கொண்டிருந்தன. போகும் இடம் தெரியாமலேயே அவன் போய்க் கொண்டிருந்தான். காலில்குத்தும் முட்கள் அவன் கருத்தினைக் குத்த வில்லை. தன்வசமின்றி உல்லாச சிந்தனை எழுப்பிய புதிய உலகத்தில் அவன் 'பறந்து' கொண்டிருந்தான். போவது, போருக்கென்றே, போரிலே சாகவும் கூடுமென்றே அவன் துளியும் சிந்திக்கவில்லை. உல்லாசப் பயணம் போகும் வழியில் ஓய்வு கொண்டிருப்பவனைப் போலக் காணப் பட்டான்.

நந்தினியைப் பற்றிய சிந்தனையோடு அவன் மனதில் ஓரளவு இடம் பிடித்துக் கொண்டது, அவளது தாயின் மறைவுபற்றிய வதந்தியாகும். அவன் நினைத்தான்; 'நந்தினி, பாவம்! தாயின் மறைவு பற்றிய கதைகளில் ஒன்றை மட்டும் உறுதியாக நம்புகிறாள். மற்றக்கதைகள் பற்றியோ, அவற்றில் ஒன்று உண்மையாக இருக்க முடியும் எனவோ அவளது பிஞ்சுமனது துளி கூட சிந்திக்கவில்லை. நந்தினிக்கு துல்லியமான மனது'';—இதை நினைக்கும் போது அவனது மேனி சிலிர்த்தது. நந்தினி பக்கத்தில் நிற்பது போன்ற பிரமையில், இருள் அடர்ந்த எதிர்ப்புறத்தில் கண் வைத்தபடி வேறு எதையும் காணமல் நின்றுகொண்டிருந்தான்.

திடீரென்று அவன் தோளிலே ஒருகை விழுந்தது. திடுக்கிட்ட தளநாயகன் திரும்பிப் பார்க்க, அங்கே இராசேந்திரன் நின்றான்.

"என்ன தளநாயகா! புலவர்களை, இயற்கை கவி பாடச் சொல்வது போல், உன்னை, இருள் கவி பாடச் சொல்கிறதோ?''

"ஆமாம் இராசேந்திரா!

இருளிடைஓர் மங்கை நின்று
எனை அழைத்தாள்
எழில் வடித்த பொன்மேனிக்
கலை கொடுத்தாள்!
பொருள் பொதிந்த புன்னகை
யால் உயிரெடுத்தாள்!
பூக்காட்டுக் கூந்தல் வழி
மனங்கெடுத்தாள்
அருள்சுரக்கும் திருமுகத்தில்
கவிபொழிந்தாள்
அஞ்சனக்கண் கூண்டுக்குள்
எனை அடைத்தாள்!
மருள்மானாள் என்மார்பில்
முகம் புதைத்தாள்!
மனங்கெட்டேன்! நினை
வற்றேன்! புவிமறந்தேன்!
என்சொல்வேன்! என்தோழா!
என்னசொல்வேன்!
எடுத்தெடுத்து உண்டசுவை
என்ன சொல்வேன்!
பொன்தோயும் அவள் மார்பில்
சாய்ந்திருந்து
புவி, வானம், கடல் முற்றும்
ஓர்கணத்தில்
மின்வேகத் துணர்ச்சியிலே
பறந்தேன்; அந்த
வியன்காதற் கதையாவும்
கூறப்போனால்
கண், வாய், மெய், செவி, நாசி
ஒவ்வொன்றுள்ளும்
காத்திருக்கும் கதையாவும்
கூறல் வேண்டும்.

—தனை மறந்த நிலையில் தளநாயகன் கவிமழை பொழிந்தான்.

இராசேந்திரனுக்கு சிரிப்பு வந்தது; அதோடு மனமும் பூரித்தது.

"நன்று தளநாயகா! வாழியாதன் வளர்த்த பிள்ளை வழி மாறிப் போகவில்லை. மகிழ்வு பிறக்கிறது எனக்கு. உம்...நீ சொல்வது...''

"நந்தினி! அவள்தான் இராசேந்திரா! என் உயிரை அவளிடமே ஒப்படைத்து விட்டேன். அவளும் என்னிடத்தில் உயிராக இருக்கிறாள். இராசேந்திரா! அரண்மனையில் நாம் முன்பு உரையாடியதுபோல் இப்போதெல்லாம் உரையாட முடிவதில்லை. அதனாலேயே பல விஷயங்களை உன்னிடம் சொல்லாமலிருந்தேன். கொஞ்சம் நேரம் எடுத்துக்கொண்டு சொன்னால்தான்

**கதைக்கு உதவிய நூற்கள்**

தமிழக வரலாறு-அறுவர் சொற் பொழிவு
தொல்காப்பியம் பொருளதிகாரம்
பண்டைச் சோழ மன்னர்கள்
தென்னாடு --[வ. சீ. --]
-- கா. அப்பாதுரை --
உலக வரலாறு -- த. இராமனுத பிள்ளை--
மூன்றாம் குலோத்துங்க சோழன்
-- வி. ரா. இராமச்சந்திர தீட்சிதர் --
அபிதான சிந்தாமணி
அம்பிகாபதி கோவை
தஞ்சைவாணன் கோவை
சோழர்கள் பற்றிய, டி. வி. சதாசிவப் பண்டாரத்தார் நூற்கள்
கலிங்கத்துப் பரணி
சோழன் கரிகாலன் -- எல். உலகநாத [பிள்ளை --
தென்னிந்திய சிலா சாசனங்கள்
மூவருலா
மணிமேகலை

உனக்குப் புரியும். இராசேந்திரா! நந்தினியின் தாய் சுமார் பத்து ஆண்டுகட்கு முன்னால் யாரோ சிலரால் கவர்ந்து செல்லப்பட்டது. உனக்கு ஞாபகமிருக்கும், இன்னும் அவளைப் பற்றிய செய்தி எதும் கிடைக்கவில்லை. என்னைக் காதலிக்கிற நந்தினி அன்னையைப் பற்றிய செய்தி தெரியாமல் மணம் செய்து கொள்வதில்லை என்ற பிடிவாதத்தில் இருக்கிறாள். முன்பு உன் தந்தை, இராசராசரே அதற்காக எவ்வளவோ ஆட்களை அனுப்பித் தேடச் சொன்னார். போனவர்களில் சிலர்கூட திரும்பாத வழியில் சென்றுவிட்டனர். இந்த நிலையில் பத்து ஆண்டுகட்கு முன்பு மறைந்தவளை எங்கிருந்து நான் கொண்டு வரமுடியும்?''

இராசேந்திரன்இதுவரை பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்து விட்டு, இப்போது ஒரு சந்தேகத்தைக் கிளப்பினான்.

"நந்தினி உன்னை உண்மையிலேயே காதலிக்கிறாளா?';

தளநாயகன் கம்பீரமாகத் திரும்பினான்.

"அதுமட்டும் சொல்வேன், இராசேந்திரா! எந்தப் பெண்ணும் எந்த ஆடவனையும் அவ்வளவு காதலிக்க மாட்டாள். உயிர்... உயிர்...உயிர்...''

தளநாயகன் ஒரே 'உயிரா'க அடுக்கியதும், இராசேந்திரன் விழுந்துவிழுந்து சிரித்தான். ஒரு பெரியநாட்டின் மன்னனும் தளபதியும் உரையாடுவது மறந்து இருவரும் சமஉலகில் இருந்தனர். அவர்களுக்கு இந்த அனுபவம் மிகவும் பழையது. ஆனால் இராசேந்திரன் பட்டம் சூடியதும் அது குறைந்து விட்டது. இப்போது மீண்டும் அந்த சந்தர்ப்பம் கிடைத்ததால் அதைநழுவவிட இருவருமே விரும்பவில்லை. கூப்பிட்ட குரலுக்கு ஓடிவரவேண்டிய ஒரு வீரனின் தோளிலே நாட்டு மன்னனின் கை கிடந்தது......

நந்தினியின் தாய் விஷயம் ராஜ்ஜிய சம்பந்தப்பட்ட ஒரு மர்மம் என்றே, இராசராசன் காலத்தில் கருதப்பட்டது. அவள் சோழநாட்டின்பால் கொண்டிருந்த அன்பின் காரணமாக வேவுகாரியமாக மாறினாள். இராசராசனது சுலபமான வெற்றிகளில் சிலவற்றுக்கு அவள் ஓர் காரணம். இதனால் ஆத்திரமடைந்த எதிரிகள் சிலர், தாங்கள் தோற்ற பின்னர் தங்களது கடைசி பழிதீர்க்கும் செயலாக, அவளைத் தூக்கிச் சென்றனர் என இராசராசன் உட்பட எல்லோரும் நம்பினர். ஐம்பெருங்குழுக்கூட இதனை ஆராய்ந்தது! ஆயினும் தூக்கிச் செல்லப்பட்ட இடம் எதுவெனத் திட்டமாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை. இடைதுறை நாட்டிலிருந்து வந்த வர்த்தகர் சிலர், ஒரு பெண்ணை ஆறுபேர் தூக்கிச் சென்று கொண்டிருந்ததைப் பெண்ணையாற்றின் கரையில் கண்டதாகக் கூறினர். பின்னர் ஒரு செய்தி வெங்கி நாட்டில் கண்டதாகவந்தது. ஈழத்துப் படகு ஒன்றில் அவளைக் கண்டது மெய்யே எனச்சிலர் சாதித்தனர். சுருக்கமாக கயல்விழியின் மறைவு சோழநாட்டிலேயே பாபரப்பை உண்டு பண்ணிற்று.

ஆயினும் நாட்பட நாட்பட, எந்த நிகழ்ச்சிக்கும் சூடுகுறைவது போல், இந்த நிகழ்ச்சியும் நினைப்பாரின்றி மறைந்தது. ஆனால், அவள் விட்டுச்சென்ற செல்வம் நந்தினி, அவளை அவ்வளவு சுலபத்தில் மறந்துவிடத் தயாராயில்லை. கயல்விழி குலமாது; கணக்காயன் ஒருவனை முறையே மணந்தாள்—அவர்களது செல்வம்தான் நந்தினி. கயல் விழியின் மறைவுக்குப்பின் கணக்காயன் தன்மகளைக் கருத்தோடு வளர்த்தான். படுத்த படுக்கையாக, வீட்டின் மூலையில் கிடக்கும் கணக்காயனை நந்தினி உயிராகக் கவனித்தாள். தேறாத உடலோடும் அவன் நோய்வடிவமாகக்கிடக்கிறான்.

"தாய் என்று வருவது; மணம் என்று நடப்பது?''—பெருமூச்சு விட்டான் தளநாயகன்.

"நான் கவனிக்கிறேன்; கவலைப் படாதே!—ஆறுதல் சொன்னான் இராசேந்திரன்.

திடீரென்றுஇருவரதுகவனத்தையும் எதிர்திசையில் காணப்பட்ட வெளிச்சம் கவர்ந்தது. ஆறு விளக்குகள் வரிசையாகத் தெரிந்தன. அது வீரர்களின் கூடாரமாக இருக்கமுடியாது. பின் என்ன?

"தளநாயகா! பார்! அதோ!... இல்லை......வா......போய்ப் பார்த்து வருவோம்...''

இருவரும் எழுந்தனர். வாளில் கைவைத்த வண்ணம் மெல்ல மெல்ல நடந்தனர்.

ஒரு வீடு; சிறியது; உள்ளே கவனித்தனர், இருவரும். ஆறு பெண்கள், வாட்பயிற்சி செய்து கொண்டிருந்தனர்! இராசேந்திரன் அவர்களை கூர்ந்துகவனித்தான். பின்னால் ஏதோ சிறு சப்தம் கேட்டு, மெல்லத் திரும்பினான், தளநாயகன். திரும்பிய தளநாயகனின் வாள், இராசேந்திரன் வாளோடு மோதி ஓசை உண்டாக்கிற்று. உள்ளே நின்ற பெண்கள் திடுக்கிட்டு, வாள்தூக்கினர்.

"யாரது!'' கம்பீரமான ஒரு குரல்!

இருவரும் சடாரென்று வாளை உருவினர்.

படபடவென்று சுற்றிலும் இருபது பந்தங்கள் எரிய ஆரம்பித்தன. நாற்பது வீரர்கள் அங்கே நின்றனர். இடையில் ஒருமங்கை கழுத்தில் கருநாகம் வளைய, பாதி ஆடையுடன் நின்று கொண்டிருந்தாள்.

(தொடரும்)

## போங்கல் மலர்

"பொங்கல் மலர் பற்றி மவுனம் ஏனோ?''

"ஐயா, ஏன் பேசாமலிருக்கிறீர்?''

---நண்பர்கள் ஆசைப் படுகிறார்கள்; நமக்கும் ஆசை தான் - சிந்தித்தோம்; சிந்தித்தோம் - ஏழைகள் இதழ் - எவ்வளவு தாங்கும்? வாங்குபவர்கள் நடுத்தர மக்கள் -- எவ்வளவு கொடுக்க ஏலும்? -- எல்லாம் சிந்தித்தோம்! நிறையக் கொடுத்து வாங்கவும் நம்பவர் தயாராக இருக்கலாம்; ஆனால்? இயக்கப் பத்திரிகைகள் பலவும் மலர் போடும் போது, எல்லாவற்றையும் வாங்க, வாசகர்களுக்கு வாய்ப்பளிக்க வேண்டாமா! அந்த எண்ணத்தில் -- எட்டணுவுக்கு— மலர் போடத் தீர்மானித்தோம். எவ்வளவு அதிகப் பக்கம் தர முடியுமோ அவ்வளவு தருவது என்றும் முடிவு கட்டினோம்.

பலரும் கதை கட்டுரை தர ஒப்பினார்கள். தருவார்கள்; வரும்!

நிர்வாகி,

தென்றல்



# தனிமைத் தணலிலே...!

..மலர்க்காடு! நிலவின் அணைப்பிலே...என் நினைவுகள் எங்கே செல்கின்றன?...பரந்த நீல வானம்...கண்சிமிட்டும் தாரகைப் பெண்கள்...மகரந்தம் நிறைந்தமலர்களைத்தழுவிவரும் பனித்தென்றல்...

அன்றொரு நாள். இதே போன்ற நிலா இரவிலே நான் அவரோடு அமர்ந்திருந்து இனிமைக் கனவுகளில் மூழ்கியிருந்தபோது, அந்த இன்பத்தின் எல்லையை எண்ணிப் பெருமூச்சுவிட்டேன்...

அவர் கேட்டார்:

"மலரே! ஏனிந்தப் பெருமூச்சு?''

"காலம் கருத்துக் குழப்பத்தை உண்டாக்கும்போது என் நிலை எப்படியிருக்கும் என்று எண்ணிப் பார்த்தேன்!''

"மலரே! உதயதாரையின் தங்க ஒளியினூடே...வசந்தத்தின் இனிமையினூடே..காலைக் கதிரவனின் ஒளிப்பிழம்பினூடே...நீ எங்கிருந்தாலும் உன் நினைவு எனக்குத் தோன்றும். முகில்களின் கர்ஜனை கேட்கும்போது, இடிவானின் ஜ்வலிப்பைக் காணும்போதும் என் உயிர் உன்னிடம் ஓடோடியும் வந்துவிடும்.''

...அதெல்லாம் நடந்து எவ்வளவோ நாட்கள் கடந்துவிட்டன. அந்த நாட்களின் இனிமையிலே இந்தநாளின் தனிமை அலைமோதுகிறது...

கனவுகளெல்லாம் கருகி உதிர்ந்து விட்டன...மயக்க நினைவுகளின் இறகுகள் இற்றுப் போயின...

நான் எங்கோ துயரின் தாழ்கோடியிலே...எனினும் காரிருளில் மினுக்குத் தாரைபோல—சருகுகளிடையே இளமொட்டுகள்போல...வசந்தம் வந்தது. பூக்காடுகள்புதுநிலவிலே நனைந்தன...உயிரினங்கள் துணைகளோடு குலவித் திளைத்தன... நான் மட்டும்..?வையம்நிறைந்த அமைதியின் குளிரிலே ஒன்றிப் போய் நிலையாகிறது, என் இதய மொட்டு!

"மலரே! நீஏன் வரவில்லை?'' அன்று அவர் கேட்டார். நான் நாணி நின்றேன்.

"வசந்தம் அழைக்கிறது, மலர்களெங்கும் தாவிக் கிடக்கின்றன. மகரந்தம் வற்றிவிடுமுன் ஓடோடியும் வா. மலரே! ஓடிவா...நீ ஏன்நாணி நிற்கிறாய்?''

தளிரிலைகளின் சலசலப்பிலே என் இதயத் துடிப்புகள்...

நிலவின் தண்மையிலே உன் சிரிப்பின் செம்மை...

தென்றலின் அசைவிலேஉன் பனிமேனியின் சுகம்...

அவள் என் மலர்...எல்லாவற்றிலும் நான் உன்னையே காணுகின்றேன். உன் இனிமையைக் காணுகிறேன்.. மலரே! ஓடோடியும் வா. சோர்ந்து போன என் உள்ளத்திற்கு சுகமளிப்பவளே ஓடிவா...வந்துவிடு.

" " "

"மலரே! நீ ஏன் வரவில்லை?''

"வழிப்போக்கனே! நீ எதற்காக அந்த மலரை என்னிடம் நீட்டினாய்? என்னிடம் அப்படி என்னதான் புதுமை கண்டாய்?

"என் தோழியர், உங்களை யாரென்று கேட்கின்றனர்! அவர்களுக்கு நான் என்ன பதில்சொல்வது? மலரைத்தந்த மாயக்கள்ளா, அவர்களுக்கு நான் என்ன பதில் சொல்லுவது?''

" " "

"மலரே! உன் கண்களிலிருந்துதான் அறிவின் ஒளியை என் உள்ளம் முத்தமிட்டது... உன் சேர்க்கையால் என்னைச் சேர்ந்த எல்லாமே புதுமையாகிவிட்டன...புதுமணம் கொண்டுவிட்டன...''

" " "

"அந்த மலரை நீ என்ன செய்தாய்?''

"எந்த மலர்''

"நான் அன்று கொடுத்தேனே. அந்த சிவப்பு மலர்?''

"ஓ...அதுவா?''

"ஆம். அதேதான். அதை என்ன செய்தாய்?''

"ஏன் இவ்வளவு படபடப்போடு தேடுகிறீர்கள்?''

"கசக்கி எறிந்து விட்டாயோ என்று அறிய.''

"கசக்கி எறிந்தால்...?

"பிரமாதம் ஒன்று மில்லை. என் இதயம் அந்த மலர்.''

" " "

கண்கள் ஏன் கலங்கியிருக்கின்றன? முகம் ஏன் வாட்டமுற்றிருக்கிறது? ஓ...நான் அந்த மலரை கசக்கி எறியவில்லை. எப்போதும் நான் அதை பத்திரமாக வைத்திருக்கிறேன். எவரிடமும் சொல்லமாட்டேன், அதை மறைத்துவைத்திருக்கும் இடத்தை''

" " "

புதுமைகளை உள்ளடக்கிய மொட்டுக்கள் தலை குனிந்து நின்றிருந்தன.மாலைத்தென்றல் தளிர்களைச்சிலுப்பிச்சிரித்தது. அந்தமலர்க்காட்டின் புல்வெளியில் நான் மல்லாந்து படுத்திருந்தேன். தோழி வந்தாள், சோக முகத்தினளாக.

"நீ எங்களையெல்லாம்மறந்துவிட்டாய்.?''

"நான் எவரையுமே மறக்கவில்லை!''

"அப்படியென்றால் நீ ஏன் முன்போல் எங்களோடு விளையாட வருவதில்லை?''

"எனக்கு விளையாட பிடிக்கவில்லை'' "ஏன்?'' அவள் என்னை 'உட்கார வைத்து அவிழ்ந்துகிடந்தஎன்கூந்தலைக் கோதி முடித்தாள், பரிவோடு! அவள் என்கண்களையேஉற்றுக் கவனித்தவாறு மீண்டும் கேட் கேட்டாள்:

"அந்த ரகசியத்தை என்னிடம் சொல்லமாட்டாயா?''

நான் மௌனமாக இருந்தேன். அவளே தொடர்ந்தாள்: "யாரந்தக் கள்வன்?''

"எனக்கென்ன தெரியும்.'' மெள்ளச் சொன்னேன். அவள் உதட்டைக் கடித்துச் சிரித்துக் கொண்டாள்.

"அவன் பெயரையாவது சொல்லு?

"தெரியாது''

"கள்ளி!'' அவள் எனக்கொரு அன்புப் பெயரிட்டாள்.

"நான் எதைத் திருடினேன்? எனக்கு எதுவுமே தெரியாது.

"தளிரே! அந்த மாபெரும் ரகசியம்தான் என்ன?''

"நான் சொல்லமாட்டேன்.''

"மலரே! அந்த மூடு மந்திரம் உனக்காவது தெரியுமா?''

"எனக்கும் தெரியாது.''

"இதயமே உனக்கு தெரிந்திருக்குமே...?''

"தெரியும். சொல்லமாட்டேன். வெட்கம்...?''

"நீங்கள் போனபின்பு என் தாய் கேட்டாள்: யாரவன்?''

"என்...என்....நண்பன்.''

உங்களைப் பற்றி எல்லாவற்றையும் சொல்லவேண்டுமென்று விடாப்பிடியாக நின்றாள் தாய்.

"எனக்கு எதுவுமே தெரியாது.'' தாய் பல்லை நெறித்தாள். பிறகு மெள்ள மெதுவாக, நயமாகக் கேட்டாள்.

"யாரது?''

"என் நண்பன்!''

"எப்படி நண்பனான்?'' பதில் சொல்லவில்லை. தாய் என்னைப் படுக்கையில் பிடித்து தள்ளினாள். வானமும் வையமும், நடுங்கும் வண்ணம் கதவைத் தாளிட்டுச் சென்றாள்.

அந்த மலரின் மனங்கவரும் மணத்தில் மயங்கி,அந்த அறையிலே இதயக் காம்பு வாடி வாடிக் கிடந்தேன். அவரை நான் சந்திப்பதெவ்வாறு...? யாரிடமும் சொல்ல எனக்கு மனமில்லை. இந்த இனிய வேதனைக்கு எவரையும் பங்காளியாக்கிக் கொள்ள நான் விரும்பவில்லை...

ஏனென்றால்,

என் எண்ணங்களெல்லாம் கூடற்ற பறவைகளை போல் அலைந்து திரிந்தபோது,...

இரவும் பகலும் பொருளற்றவைகளாக உருண்டு சென்றபோது,...

என் கன்னிப்பருவம் தீயின் மேலுள்ள மௌனதியானமாக இருந்தபோது...

நான் கண்டேன்...!

தொலையில் ஒளியின் மெல்லிய கோடுகளினூடே, தெரிந்த உங்கள் முகம்!...

உணர்ச்சிச் சலசலப்புகள்மிக்க அந்த விநாடியில் என் உள்ளம் கசிந்துருகி புறப்பட்ட இனிய கீதத்தை, பனித்துளி சிந்தும் கடற்பரப்பின்மேல் பறந்து சென்ற வெண்பறவை தன் இனிய குரலிலே பாடிக்காட்டியது.

மலரே! நீ யார்?
மகரந்தமே! நீ யார்?
பனியே! நீயார்?
ஒளியே! நிலவே! நீ யார்?

"நான் தனியன்!'' ஒரு நிலா இரவில் அவர் என்னிடம் சொன்னார்,

"நானிருக்கிறேன்!'' என்று.

"நீ இல்லாத ஒரு நாளில்... அன்று நான் தனிமைத் துயரிலே...''

', தனிமையின் எல்லையிலே என்னைத் தள்ளிவிடாதீர்கள்.'' அவர் என்னைப் பிரிந்தபோது நான் சொன்னேன்.

"மலரே! தனிமையின் தணலிலே உன்னைத் தள்ளிவிடமாட்டேன். நான் போகும்போது உன்னையும் அழைத்துச் செல்கிறேன்.''

"மீண்டும் எப்பொழுது வருவீர்கள் ?''

"காலம் வரும்போது''

"இங்கே எப்படி வந்தீர்கள் ?''

"கர்ந்தம் இழுத்தது.''

"அப்படியென்றால் ?''

"நீ''

"அன்பே !...அணைத்துக் கொள்...''

உரக்கப்பாடவேண்டுமென்று தோன்றுகிறது. தொண்டை யிடறுகிறது...ஏடுகளைப் புரட்டினால் எழுத்தெல்லாம் அவர் உருவம்...உணவை வாய்க்கெடுத்துச் செல்லும்கை இடையே நின்று விடுகிறது. அவர் நினைவுகள்...எங்கும் எப்பொழுதும் அவரையே காணுகிறது. இராப் பகலுகளின் தொடர்புஅன்றுப்போயிற்று... கண்ணீரின் வெம்மை அந்தத் தொடர்புகளை அறுத்துவிட்டது. கடைசியாக அவர் என்னிடம் நீர் வாங்கிய அருந்திய அந்தப் பளிங்குப் பாத்திரம் உடைந்து போயிற்று...என் ஒவ்வொரு மூச்சும் அவர் பெயரோடு வெளிவருகிறது. எங்கிருந்தாலும் என்னிடம்வாருங்கள்...ஒருமுறைவருகைதாருங்கள்...நான் இருளில் அமிழ்ந்து கொண்டிருக்கிறேன்.

இருளில் கனத்த காரிருளில் என் இதயத்தில் ஒளிப்பிழம்பாக நிற்பது உங்கள் நினைவுகள்! காலம் அந்த நினைவுகளையும் ஓடி மறைத்துவிடும். புயல் வீசுகிறது...பூமி நடுங்குகிறது. மலைகள் சின்னிச் சிதறுகின்றன. தீ...தீ...எங்கும் படர்ந்து பிடிக்கும் தீ...எல்லாம் கண நேரத்தில் சாம்பல் மேடாகி விட்டது' கொடுங்காட்டின் இடையே' பனித்துளியைப் போல, ஒரு ஒளிப்பிழம்பு... கடைசியில் அது மாபெரும் வண்ணக் கோலமாக எங்கும் நிறைந்தது. அந்தக் கோலம் வகுத்துத் தந்த பாதையினூடே நடந்து, நடந்து செல்கிறீர்கள்...நான் ஏங்கோ வழி தவறி சூன்யத்திற்குச் சென்றுலயித்தேன். எனினும் என் பார்வை உங்கள் காலடிகளை அந்த மற்ற தொலைவரை பின் தொடருகிறது. என் நினைவுகள் மங்கிக் கொண்டே வருகிறது. திடீர் என்று ஒரு ஓசை !

"மலரே!நீயேன்வரவில்லை?''

"அன்பே!''

நான் விழித்துக்கொண்டேன். சாரளம் வழியாக தெரிந் வான் முகட்டில் இரண்டு தாரைகள ஒளி சிந்திக்கொண்டிருந்தன.

உங்கள் வரவை ஒவ்வொரு நாளும் கணமும், காலை முதல் காலமெல்லாம் !

அறையெங்கும் உங்களுக்காகப் புதுப்புதுப் பண்டங்களை நிரப்பி வைத்திருக்கிறேன். பாதை யெல்லாம் மலர்தூவி, பக்கமெல்லாம் ஓரத்தி... இருள் நிறைந்த பாதையில் உங்கள் ஒளிப் பாதங்களைஎதிர்பார்த்து காத்துக் கிடக்கிறேன்.

வருவோர் போவோரையெல்லாம் உற்றுற்றுகவனிக்கிறேன். என் அவர் தானு ? என் அவர் தானு? என்று,உலகம் உரக்கப் பாதையிலே சுருங்கிக் கிடக்கும்போது, நான் பாதையிலெழும் உங்கள் காலடியோசைக்காகக் காத்துக் கிடக்கிறேன். என்னைத் தாண்டிச் செல்லும்' பொருளற்ற இராப் பகல்கள்...

இந்தச் சுமையை என்னால் தாங்க முடியாது. கொடுமை நிறைந்த இந்த உலகிலிருந்து நான் மீளாத உலகிற்குச் செல்லப் போகிறேன்.

முகில்களே ! உங்கள் கோர கர்ச்சனையால் என்னைக் கொல்லுங்கள்!...இடிவானே ! உன் கொடுமையால் என்னைத் தூள் தூளாக்கி விடு !...என்னால் வாழ முடியாது. நினைவுகளின் பிடியிலிருந்து நான் நழுவி விடுகிறேன்,

அன்பே ! நான் உங்கள் காலடியை முத்தமிடுகிறேன் !

—பத்மாவதி

### கவிஞரின் சாதுர்யம்

இங்கிலாந்தில இரண்டாம் சார்லஸ் அரசு புரிந்த காலத்தில், எட்மண்டு வாலர் என்ற ஒரு கவிஞர் இருந்தார். அரசரைப் பற்றி அவர் ஒரு கவி எழுதினர். இரண்டாம் சார்லஸுக்கு முன், சர்வாதிகாரி போல் அரசாண்ட கிராம்வெல் என்ற வீரனைப் பற்றியும் அவர் மற்றொரு கவி எழுதினர்.

**அரசர் ;** நீர் என்னைப் பற்றி எழுதிய கவியைவிட, கிராம்வெல்லைப் பற்றி எழுதிய கவி அதிக ஜோரா யிருக்கிறதே ! ஏன்?

**கவிஞர் :** (சிறிதும் தயங்காமல்) அரசே ! உண்மையை விடக் சுற்பனைதான் புலவர்களுக்கு அதிக ஜோராய் எழுத வரும் என்று தங்களுக்குத் தெரியாதா ?

# இரு உலகின் உரையாடல்...

(5-ம் பக்கம் தொடர்ச்சி)

வதென முடிவு கட்டினர், இந்த சமயத்தில் பல எதிர்ப்புகளுக்கும் ஈடு கொடுக்க வேண்டியிருந்தது.

பல அறிஞர்களுடன் கலிலியோ வாதிட்டார்' வலைந்த கொள்கையினர் வாதிட முடியாது ஓடினர் ; வாதிட முடியாது தோற்றோடிய அறிஞர்கள் தங்கள் அவமானத்தை மறைக்க தூற்றத் தொடங்கினர். அறிஞர் களிடையே எத்தகைய கெடு மதி !

அன்று முதல் கலிலியோ ஆண்டவனை மறுப்பவன் மதத் துரோகி என்று பறைசாற்றலாயினர்.

கலிலியோவின் கொள்கைகளுக்கு மாருக. பூமி அசைவதில்லை. அதன் மீது வானம் கிண்ணத்தைப் போல் கவிழ்க்கப் பட்டிருக்கிறது அந்தக்கிண்ணத்தின்மேல் தான் சூரியன் இருக்கிருன் என்று 'டோமிலி' என்பவரின் கருத்துகளையும் "வானத்தின் நடுவில் சூரியன் இருக்கிருன் பூமியும் அசைவதில்லை'' என்ற பைபிளின் கருத்துக் களையும் காட்டி கலிலியோவை கொடுமைக்கு ஆளாக்கினர்.

மதவாதிகள் - விஞ்ஞானிகள் அறிஞர்கள் ஆகிய அத்தனை பேரிடமிருந்தும் எதிர்ப்புக் குரல்கள் கிளம்பின : என்ன செய்ய முடியும் அந்த உத்தமனுல் ஞனின் வாழ்க்கையே சோகக் கதையாக மாறி விட்டது ; மனநோயால் அவரைப் பல உடல் நோயும் வந்து பற்றின : அந்த நேரத்தில் தான் இந்த நன்றிக் கெட்ட உலகிற்குத் தன் கடைசி காணிக்கையாக "விஞ்ஞானத்தின் உறையாடல்'' என்ற நூலைத் தந்தார் : அந்தக் கடைசிப் பணியுடன் முகத்திற்கு அணி செய்து கொண்டிருந்த கண்களை இழந்தார் : அப்பொழுது தன் நண்பர் ஒருவரிடம் ' **கண்களை இழந்தேன் - கவலைகள் சூழ்ந்து கொண்டன - ஐயோ ! இனிமேல் நான் வாழவே முடியாதா ?** என்று கூறி வாய் விட்டு கதறினராம் : அந்தோ - கொடுமை ! இந்த பொல்லாத உலகில் அல்லல் பலவற்றிற்கு ஆட்பட்டும் வாழ என் ஆசைப் பட்டாரோ தெரிய வில்லை ! மத வெறியர்கள் அந்த மாவீரரை சாகும்வரை வதைத்துக் கொண்டே வந்தார்கள் ; மூப்பு வேறு அந்த உத்துமரை சவக் காட்டை நோக்கி இழுத்துக் கொண்டிருந்தது, எலும்பும் தோலுமாக மாறினர் ; நாடு தனக் கிழைத்த கொடுமைகளை எண்ணி எண்ணி - கண்ணீர் விட்டார். இரு உலகங்களின் உறையாடல் என் உயிரைக் குடித்து விட்டது என்று முணுமுணுத்தப் படியே இந்த பயங்கரச்சமுதாயத்தின்பிடியிலிருந்து விடுதலை பெற்றுக் கொண்டார் : ஆனல் அவர் விட்டுச் சென்ற இரு உலகங்களின் உறையாடல் 'விஞ்ஞான - உலகிற்கு பெரும் பரிசு ! ஆனல் கலிலியோவைப் பொருத்த மட்டில் அவர் உயிரைக் குடித்த கொடிய நஞ்சு! இல்லையா ?

### நிச்சயமான லாபம் !

ஒரு வியாபாரியைப் பார்க்கச் சென்ருர் மற்றொரு கம்பெனியின் பிரதிநிதி. தமது விசிட்டிங் கார்டை உள்ளே கொடுத்தனுப்பினர்.

அதைக் கொண்டுபோன பையன் திரும்பிவந்து, "எஜமானுக்கு சௌகர்யப்படாதாம். உங்கள் விசிட்டிங் கார்டைக் குப்பைக் கூடையில் போட்டுவிட்டார்'' என்ருன்.

"போகிறதப்பா. அந்தக் கார்டை மாத்திரம் எடுத்துவந்து தந்துவிடு. அது இரண்டு காசு செலவழித்து தயாரானது. அந்த நஷ்டமாவது இல்லாமல் திரும்புகிறேன்'' என்ருர் பிரதிநிதி.

எஜமானின் குப்பைக் கூடையைப் போய்க் கிளறினுன் சிறுவன். காரணத்தை விசாரித்தறிந்த எஜமான், "இப்பேர்பட்ட மனிதனைப் பார்க்கத்தான் வேண்டும். அழைத்து வா'' என்று உத்திரவிட்டார்.

1615 ம் ஆண்டு ஐந்தாவது பால் என்ற போப் பாண்டவர் கலிலியோ இனி எத்தகைய விஞ்ஞான ஆராய்ச்சியும் வெளியிடக் கூடாது - அப்படி வெளியிட்டால் சித்திர வதைப் பரிசு' என்று ஒரு பயங்கர எச்சரிக்கை விட்டார் அந்த ஆண்டில் தான் கலிலியோ எழுதிய **இரு உலகங்களின் உரையாடல்**' என்ற நூலைப் படித்து அதில் மத விரோத கருத்துகளும் போப் பாண்டவரின் நடை உடை பாவனைகளும் கேலி செய்யப் பட்டிருப் பதாகக் கூறி கலிலியோவைக் குற்றவாளிக் கூண்டிலேற்றி நிறுத்தினர்கள் ; அப்பொழுது தான் அவருக்கு வயது அறுபத் தொன்பது !

அந்த பயங்கர சூழ் நிலையின் போது "குருமார்களே நீங்கள் வேத நூலை நம்பாதீர்கள் அது பொய்யான விண்ணுலகிற்கு வழி காட்டுமே தவிர விஞ்ஞான புதுமைக் கல்ல ! என்ருர்.

கொடுமையே உருவான குருமார்கள் சினம்தணிர்ந்தாரில்லை.

உண்மை - கொடுமைக்கு முன் தலை வணங்கிற்று : அந்த முது கிழவரை. விலங்கு மனங் கொண்ட குரு மார்கள் சிறையில் தள்ளி வாட்டினர் ; இந்தக் கொடுமை போதா தென்று நாடு கடத்தி விட்டனர்; அன்று முதல் அந்த அறி

### கர்நாடக தி. மு. க. மகாநாடு

கர்நாடக தி. மு. க. முதல் மாநாடு வருகிற டிசம்பர், 18,19, தேதிகளில் பெங்களூரில் நடைபெறும்.

சமுதாய சீர்திருத்த மாநாட்டிற்கு, திரு. காஞ்சி கல்யாண சுந்தரம், தலைவராகவும், திரு. ப. உ. சண்முகம் திறப்பாளராகவும் அரசியல் மாநாட்டிற்கு,திரு. என். வி. நடராசன் தலைவராகவும், திருமதி, அருண்மொழி, அவர்கள் திறப்பாளராகவும் தேர்ந் தெடுக்கப்பட் டிருக்கிறுர்கள்.

அறிஞர் அண்ணு, உட்பட அனைவரும் கலந்துகொள்வர்.



# கேள்விப்பெட்டி

**அ. கி. கலியமூர்த்தி, குடந்தை**

'இலக்கியம்' என்பது வடசொல் எனச்சில புலவர்கள் கூறுகிருர்களே தங்கள் கருத்து என்ன ?

இதுபற்றி ஒரு முத்தமிழ் விழாவிலேயே பெரிய சர்ச்சை எழுந்தது. "இலங்கு - இயம் - இலங்கியம் என்று ஆகி, இலக்கியம் என வலிந்தது. ஆகவே 'தமிழ் தான்'' என்று சிலரும், "இலட்சியம் என்ற வடசொல்லே இலக்கியம் என ஆயிற்று'' என்று சிலரும் கூறுகின்றனர். இலக்கணம், இலக்கியம் இரண்டும் இலட்சணம், இலட்சியம் ஆக மாறிற்று என சிலர் உறுதியாகக் கூறுகிருர்கள். எனக்கென்னவோ, இலக்கியம் தமிழ்ச்சொல் என்றே தோன்றுகிறது. 'இதுதான்' என்று முடிவு கட்ட சரியான ஆதாரம் இல்லை. எல்லாப் புலவர்களும் சந்தேகத்தில் சமர் புரிகிருர்கள். (இதே கேள்வி கேட்ட பலருக்கும் இது பதில்).

◉ ◉ ◉

**கி. சண்முகசுந்தரம், பொள்ளாச்சி**

நாவலர் பாரதியார் அவர்கள் ஒரு பத்திரிகையில், "திராவிட நாடா? எது திராவிட நாடு? யாரோ சிலர் தெரியாமல் கூறுகிருர்கள்!'' என்று கூறியுள்ளாரே தங்கள் கருத்து என்ன ?

நாவலரையா, அவர்கள் நன்கு கற்றவர்தான். ஆயினும் திராவிட நாடு பற்றிய விளக்கத்தை இது வரை அவர், அண்ணுவிடமோ நம் நாவலர், சம்பத் போன்ருரிடமோ, சுருக்கமாக நமது தோழர்களிடத்தில் கேட்டிருக்கமாட்டார். கேட்டிருந்தால் அப்படிச் சொல்லியிருக்கமாட்டார்.

◉ ◉ ◉

**மோ. ந. பழனிசாமி, சிவகங்கை**

ஊழின் பெருவலி யாவுள ? மற்றொன்று சூழினும் தான்முந் துறும்,
இதற்கு புதுப்பொருள் சொல்க.

"ஊழ்' என்பதற்கு 'முறை'என்பது பொருள். முறையோடு காரிய மாற்றினல், அதனிலும் வலிமையானது யாது ? இடர்கள் சூழ்ந்தாலும், முறையாக ஆற்றிய செயல் முன்னின்று காக்கும் !'' இது அடியேன் புதுப்பொருள். இதற்கு குறளிலேயே ஆதாரம் காணலாம்.

"ஞாலங் கருதினும் கைகூடும் ; காலம்
கருதி இடத்தால் செயின்''
"பருவத்தோ டொட்ட ஒழுகல், திருவினைத்
தீராமை ஆர்க்கும் கயிறு.''

◉ ◉ ◉

**பசுந்தலைவன், எழும்பூர்**

"தெய்வந் தெளிமின்; தெளிந்தோர்ப் பேணுமின்'' என்ற சிலப்பதிகார வரிகளுக்கு எனது நண்பர் "தெய்வத்தை அறிந்த பார்ப்பனர்களைப் பேணவேண்டும்'' என்கிருரே ; சரியா ? விளக்கம் தருக.

"தெய்வம் தெளிமின்—தெய்வம் எது என்று தெளிவுறக் கண்டு கொள் ; தெளிந்தோர்ப் பேணுமின்-அப்படித்தெளிவுற்றவர்களைப் பேணி நட'' என்பது பொருள். பார்ப்பனர்கள், தெய்வம் எது என்று தெளியாத காரணத்தால் தான் சாணி உருண்டையிலிருந்து மண் உருண்டை வரை தெய்வம் எனக் கூறுகின்றனர். முன்னலே இருந்த ஒருவனுக்கு இதுபற்றிக் குழப்பம் ஏற்பட்டு," நமக்கு எதற்கு இந்த வம்பு ! சரிபோ! தூணிலும் இருப்பான் ; துரும்பிலும் இருப்பான் ;'' என்று மொத்தமாகச் சொல்லிவிட்டுப் பொறுப்பைக் கழித்துவிட்டான்! இன்னும் இளங்கோவடிகள் காலத்திலேயே தெய்வம் எது என்பது பற்றிக் குழப்பம் ஏற்பட்டிருந்தது அறியக் கிடக்கிறது.

"தெய்வம் எது என்று இன்னும் தெளியவில்லை ; எங்காவது எப்பொழுதாவது, யாராவது தெளிவு கண்டு கூறினல் அவரைப் பேணு!'' என்று இளங்கோவடிகள் கூறியுள்ளார்! பார்ப்பனர்கள் தெய்வந் தெளிந்தவர்கள் என்று பார்ப்பனர்களே, ஒப்புக்கொள்ள மாட்டார்களே !

◉ ◉ ◉

**சு. பழனியப்பன், போடிபட்டி, உடுமலை**

ஐயா, புரட்சிக்கவிஞர், 'மாந்தோப்பில் மணம்' என்ற கவிதையில், "தாமரைபூத்தகுளத்தினிலே முகத்தாமரை தோன்ற முழுகிடுவாள்'' என்கிருரே, முழுகிய பின் முகத்தாமரை எப்படித் தோன்றும் ?

தோழரே ! ஏன் இப்படி அவசரப்படுகிறீர் ! முகம், நீருக்கு மேலேயும் உடல் நீரின் உள்ளேயும் கிடக்க முழுகினுள் என்பதுபொருள் 'முகம் தோன்ற முழுகினுள்' என்பது வரிசை. நீர் என்ன, புரட்சிக் கவிஞர், 'கவிதையில் தவறு' செய்வார் என்ரு கருதுகிறீர்?

◉ ◉ ◉

**தமிழ்த்தம்பி, சென்னை-6**

'கற்பனை' என்பதன் பொருள் என்ன ?

கல் - பனை - கற்பனை; அதாவது 'கல்லால் செய்யப்பட்ட பனைமரம்' என்பது பொருள் ! ஓய் ! ஓய் ! அதற்குள் என் மதியை முடிவு கட்டி விடாதீர் ! 'இட்டுக் கட்டிச் சொல்லும் கருத்து' என்றும் பொருள் தரும். 'பகாப்பதச்'சொல் அது !

◉ ◉ ◉

**அ. தாசன், பேரம்பூர்**

'இலக்கியத்தில் காதல்' என்ற பகுதியில் அகநானூற்றுப் பாடல்களில் உள்ள காதற் சுவையை எழுதாததேன் ?

'இலக்கியத்தில் காதல்' பற்றி காரை முத்துப்புலவர் சாகும்வரை எழுதுவதற்கு, இலக்கியத்தில் விஷயம் இருக்கிறது. அதற்குள் அகம் வராமலா போய்விடும் !

◉ ◉ ◉

**அ.வேங்கடேசன், ஆயிரம்விளக்கு**

'போற்றுபவர் போற்றட்டும்' என்கிற உமது லட்சிய வரிகளில், தொடர்ந்து செல்வேன்' என்பது சரியா, சொல்வேன் என்பது சரியா ?

'செல்வேன்' என்பதே சரி.

◉ ◉ ◉

**வி. எம். ஜக்கிரியா, மலையப்பன் தெரு, சென்னை-14**

எப்போதும் யாரையும் ஏசிக் கொண்டிருப்பதே, தி. க, தி.மு.க வட்டாரத்தினரின் நவீன கலாசாரம் என்று ம. பொ. சி கூறுகின்ருரே, தங்கள் கருத்து ?

ஐயோ ! பத்தினியிடம், பரத்தை வித்தகம்பேசியகதையாக உள்ளது இது ! எதிர்க்கட்சியை தாக்குவதில் 'சாக்கடை அத்தியாயம் ஆரம்பித்து வைத்தவரே இவர்தானே ! இவர் இப்போது, காந்தியடிகளுக்கு பேரப்பிள்ளை மாதிரி 'பத்தினித்தனம்' பேசுகிருர் ! விந்தை விந்தை !

*அடுத்த இதழில் :*

**'கவிஞர் முடியரசன்'**

**பற்றி தமிழண்ணல் எழுதுகிருர்.**

# கம்பன் 'பாலிஷ்' போடுகிறுன்

'கம்பனுர் திருப்பாட்டில், வரைக் காட்சிப் படலம் என்ருெரு 'வெண்டக்காய்ப் படலம்' இருக்கிறது. இதிலே ஆண்களும் பெண்களும் பிறந்த மேனிக்கு ஆடுகிருர்கள். கம்பனுரின் கைவண்ணத்தில் ஒரு பகுதியை இதில் காணலாம். "பாவம், கம்பனிடம் உள்ளது ! உள்ளது !'' என்று மாரடிக்கிருர்களே சில தான்தோன்றிகள், அவர்களுக்கு வரைக்காட்சிப்படலத்திலிருந்து ஒரு பெரும் பாவத்தைக் காட்டலாம் ! கலை இதில் வடிகிறது ! என் கலை [சேலை] கொஞ்சம் கொஞ்சமாக உரிகிறது !

நடந்துவந்தகளைப்போடும்மாதர்கள் தூங்குகிருர்கள். நடந்தபோது கிளம்பிய தூசி அவர்கள் உடம்பு முழுவதும் படிந்து கிடக்கிறது. இந்த நிலையில் எல்லோரும்என்ன செய்வார்கள் ? காலையில் எழுந்து அருவியில் குளித்து தூசு நீக்குவார்கள். அவ்வளவு நேரத்திற்குக் கம்பன் விடுவானு ? விட்டால், 'புண்ணிய புராணம்' என்ன ஆவது ! பெண்கள் தூங்க ஆரம்பித்ததும், அங்கிருந்த வாலிபர்கள் கையில் எண்ணைத் தோய்த்த துணியைக் கொடுக்கிருன் கம்பன். வாலிபர்கள் அந்தத் துணியைக் கொண்டு, அந்த மங்கையரின் மேனியை 'பாலிஷ்' போடுகிருர்கள். பாலிஷ் போடும்போது - உடம்பு முழுவதும் உள்ள தூசியைத் துடைத்து பாலிஷ் போட வேண்டுமல்லவா ? அதன்படி அவர்கள் எங்கெல்லாமோபாலிஷ் போடுகிருர்கள். ஆகா! 'மதுகைமாந்தர்கள்' பெரிய நபுஞ்சகர்கள் போலிருக்கிறது ! சும்மா சும்மா 'பாலிஷ் போட்டுப் பார்த்துக் கொண்டிருப்பார்கள் போலிருக்கிறது! அட, கற்பனைச் சிகரமே ! "பாலிஷ் போட்டு, டெக்னிகலர் வர்ணம் பூசி, கண்ணுடிச் சட்டம் போட்டு நிறுத்திஞர்கள்'' என்று சொல்லியிருந்தால், கலையின் உச்சிக்கே போயிருக்கும்! 'அந்தவாலிபர்களால் வேறு ஒன்றும் முடியாது என்பதும் சுத்தமாக வெள்ளிடை மலையென விளங்குமே !

**மிதிக்கநிமிர் தூளியின்**
**விளக்கம் அறுமெய்யைச்**
**சுதைக்கண் நுரையைப்பொருவு**
**தூசுகொடு தூசை**
**உதிர்த்தனர் இளங்குமரர்;**
**ஓவியரின் ஒவம்**
**புதுக்கினர் எனத்தருண**
**மங்கையர் பொலிந்தார் !**

இது கம்பனுர் பாடல்! ரசியுங்கள்! ரசியுங்கள்!

அட கற்பனையே ! உன் தலையில் இடி, மின்னல், மழை, கல் எல்லாம் விழ !

17-11-54 மாலை சென்னை பச்சையப்பன் பள்ளியில் **இலக்கியம்** என்ற தலைப் பின்கீழ் கண்ணதாசன் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம் அடுத்த இதழில் இடம்பெறும்.

### பெண் !

ஒரு பெண் எனக்காகக் காத்துக் கொண்டிருக்கிருள் ;
அவளிடம் அனைத்தையும் காண்கிறேன், எதுவும் குறைவில்லை ;
அழகியின் காதல் உலகிலே, தாய்மை, காதல் வெறி, அழகு போதை, அரசியல் இன்பம், குழந்தை எழில், தெய்வத் தொடர்பு, நீதி, நம்பிக்கை, உடலின் எழில், பால் எல்லாம் கலந்து புரளுகின்றனவே !
காதல் நுரை இருவரையும் காந்த சக்தியோடு இழுத்துப் பின்னிப் பந்தாடுகிறதே !
காதல் உலகே, சகல சிருஷ்டிகளுக்கும் ஆரம்பமும் அஸ்திவாரமும்! கலை, இசை, நடனம், ஓவியம் எல்லாம் காதல் உலகிலே பிறந்து வெளிவருகின்றன;
குழந்தைகள், எழிலோவியமாக தொடர்ந்து பிறந்து, பல்வேறு அழகுக் கோவிலாக வாழ்க்கையிலே மின்னலிடுகின்றனவே;
காதல் உலகிலே, இன்பத்தை தடுக்கவே கூடாது:
இயற்கைக்கு எதிர்க் கட்சியாக, சட்டம் முள் வேலி கட்டக் கூடாது;
கடல் அலைகள், மரக்கிளைகள், நிழல்கள் கலப்பதுபோல, காதலர்கள் கலந்து இன்ப உலகில் வாழவேண்டும்: இதைத் தடை செய்பவன், பாபி;
காதலை எதிர்ப்பவன், முட்டாள், ஈரமிலா நெஞ்சுடையான்; அவன் இதயமில்லாத இறுகிய சண்டாளன்;
பெண்களின் கண்கள் கவிதைப் பொக்கிஷங்கள் !

—வால்ட் விட்மன்

நவரத்ன மாலையெனும் மங்கை, நறுமண மலர்களைத் தாங்கி, தென்றலில் ஆடி மகிழும் எழில் பூங்காவில் ஏகாந்தமாக இருந்தாள். கூளப்ப நாயக்கன் அக்காவினுள் நுழைந்தான். 'அணங்கோ? இந்திரலோகத்து ஊர்வசியோ? யார் இந்த அழகு மங்கை? அவன் நினைவுகள் கண்களின் துணையால் குழம்பின. கண்களில் ஒளி பரவ அக்காரிகையை நோக்கினான் திரும்பவும். அவளோ, யார் இந்த மன்மதன்? மாரனின்மலர்க்கணைகளோ இவனின் இரு விழிகளும்! மன்மதன்தான் உருவிலியாயிற்றே; இவன் இந்த லோகத்து மனிதன் தான்!' என்று திடமாக நம்பினாள். கண்கள் கலந்தன! எண்ணங்கள் கலந்தன! இதயங்கள் சேர்ந்தன!

காந்தம் இழுத்தது - இரும்பு இணைய நெருங்கியது. நவரத்ன மாலையின் அருகே நாய்க்கன் நகர்ந்தான்.

"உன் பெயர் என்ன ஊர்வசியா?" என்றான்.

அவளுக்கு சிரிப்புப் பொங்கியது. மெல்லிய மலரிதழ்களிலே சிரிப்பு திரிந்தது. "என் பெயர் நவரத்ன மாலை-ஊர்வசியுமல்ல, திலோத்துமையுமல்ல!" என்றாள். அவள் குரல் ஒலி கேட்டு மரத்தில் அமர்ந்திருந்த குயிற்பேடு நாணிப் பறந்து சென்றது.

'நவரத்னமாலை! நவரத்ன மாலை!' அவன் வாய் முணு முணுத்தது அவள் செவிகளில் ரீங்காரம் செய்தது. அப்பெயரை உச்சரிப்பதால் அவன் வாய் இனிப்பதாக உணர்ந்தாள். அவன் வாயில் தன் பெயர் ஒலிக்கப்படுவது அவளுக்கு இன்பம் சேர்ப்பதைப் போலிருந்தது. அவள் முகம் நாணத்தால் சிவந்தது. ஆனால் அழகுதான் அதில் மிகுந்தது. அவனுடைய மனதில் இன்பம் ஒளி பாய்ச்சியது. அவள் விழிகள் வேலைப் போன்று கூர்மையுடன் நோக்கின. அவன் அவள் பார்வையைத் தாங்கமாட்டாது தவித்தான்.

"நவரத்னமாலை, உன் விழிகள்! உன் விழிகள்!" அவன் அதற்கு மேல் பேசாமல் தயங்கினான்.

"என்னவாம் என் விழிகளுக்கு? ஏன் வார்த்தைகளை விழுங்குகிறீர்கள்?" என்றாள் அவள் சிரித்த குரலில்.

"வாளும் வேலும் என் விளையாட்டுக் கருவிகள். அவைகளைக் கண்டு நான் அஞ்சினதில்லை. பாய்ந்து வரும் ஈட்டிக்குப் பயந்ததில்லை. உன் முகத்தில் இரு விழிகளைக்கண்டுதான் அஞ்சுகிறேன்," என்று அவன் பரிகசித்தான். அவள் தன்பார்வையால் மறுபடியும் அவனைக் கொத்தினாள். அவன் இப்போது மெய்யாகவே நடுங்கினான் அவள் வேல்விழிகளைக் கண்டு!

அவன் அவள் அழகில் லயித்துப் போனான். அவள் சிரித்தபோது கன்னங்கள் சிவந்தன. பற்கள் பளிச்சிட்டன. "அழகே! உனது கன்னங்கள் மாம்பழக் கதுப்பை நினைவுபடுத்துகின்றன. காதுகளோ வெள்ளைக் கொடிகள். பற்களுக்கு என்ன சொல்வேன்?" அவன் அவளை வர்ணிக்கலானான்.

"உம்...இன்னும் என்னென்ன சொல்ல வேண்டுமோ சொல்லுங்களேன். அகராதியில்தான் வார்த்தைகள் குவிந்து கிடக்கின்றனவே!" என்றாள் கேலியாக.

அவள் பேசும்போது குவிந்த மலரும் பவள வாயிதழ்கள் அவன் நினைவைத் தீண்டின. "உனது சிவந்த மெல்லிதழ்களை பவளங்களுக்கு ஒப்பிடுவேன். ஆனால், அதில் சுவையிருக்காது, அமிர்தம் குழையாது-முத்தமே கிடைக்காதே அதிலே! உனது உதடுகள்!" அவன் பேச்சை இடைமறித்து, "என்ன அதற்கு?" எனறாள் அவள்.

"இல்லை உங்கள் கழுத்தைக் காணும்போது சங்கின் நினைவு வருகிறது. பயன் என்ன? உங்கள் மலர்க் கழுத்தில் நகரேகைகள் சித்திரம் வரையும், சங்கிலே நகரேகைகள் பதியாதே! கழுத்திற்கு என்ன உவமை சொல்வேன்?" என்றான்.

"பவளத்திலே முத்தங் கிடைக்காது; சங்கிலே நகம் பதியாது-அகராதி முடிந்ததா?" என்றாள் சிரித்த கோபத்துடன்.

"வழவழப்பான உனது தோள்களை மூங்கிலுக்கு இணையாக்க எண்ணினேன். அப்படிச் சொன்னால் பாவலர்கள் பகலவனுக்கு மின்மினியை ஒப்பிடுவரே! என்ன தவறு செய்ய இருந்தேன்?" என்றான்.

"ஏன் விட்டு விட்டு சொல்கிறீர்கள்? உங்கள் வர்ணனை அகராதியை முடித்து விடுங்களேன்!" என்றாள்.

"அளவுக்கு அதிகமாக அகராதியைப் பயன்படுத்தினால் உனக்குக் கோபம் வந்துவிடும். அந்த ஊடலைத் தீர்க்க என்னால் முடியாது இறுதியாக உன் மொத்த அழகைச் சொல்லு.என் ஆசையைத் தீர்த்துக் கொள்கிறேன்." என்றான்.

"காதுகள் இருக்கின்றனவே, சொல்லுங்கள் கேட்கிறேன்." என்றாள் அவள்.

"கருமணலைத்திரித்து விட்டதைப் போன்று, பின்னிவிடப்பட்ட கூந்தல் உன் பின்னழகை பரிமளிக்கச் செய்கிறது. அன்ன நடையென் பார்கள். அந்த நடையை உன் பின்னழகு எதிரொலிக்கிறது. உன் பின்னழகைக்காணில் மதனவேள் தான் ரதியைத் தேடி ஓடுவானா? உன்முன்னழகு என்னால் வர்ணிக்க முடியாத புகழ் பெற்றது. அந்த எழிலைக்காணின் முற்றுந் துறந்தாக முழங்கும் முனிவர்தான் தவஞ் செய்வரோ? முடியாது மங்கையே முடியாது-அவர்களால்!" என்றான் அவன்.

அவள் சிரித்தாள், அவன் பேச்சைக் கேட்டு! அவனும் நகைத்தான்...!

" " "

அழகை எல்லோராலும் அனுபவிக்க முடிவதில்லை. ரசித்து அனுபவிப்பவர்களிலும் அதன் ரசனையை ரகஸ்யப் படுத்துபவர்கள்தான் அதிகம். அனுபவ முடையவர்களில் அதை வெளிப்படுத்தும் முறையில் வெற்றி காண்பவர்கள் ஒரு சிலரே. வசன நடையைக்காட்டிலும் கவிதைகளால் எக்கருத்தையும் சுருக்கமாக-சுவை நிரம்பியதாக சொல்லிவிடலாம். தமிழ் நாட்டுக் கவிஞர்கள் இதில் பேரும் புகழும் பெற்றவர்கள்.

அழகு நங்கை நவரத்ன மாலையை நிலக்கோட்டைப் பாளையக்காரன் கூளப்பநாயக்கன் சந்திக்கிறான். அவள் அழகை அலங்கரிக்கும் அங்கங்களை அலங்கார வார்த்தைகளால் அளந்து காட்டுகிறான். கூளப்பநாயக்கன் வாயிலாக சுப்பிரதீபக்கவி தன் சொல்சிலம்பத்தை எங்ஙனம் உபயோகிக்கிறார் என்பதைக் காணுங்கள்.

"வித்துருமந் தன்னையுங்கள்
மெல்லிதழ் என்றால், இதிலே
முத்தங் கிடைக்கும், அதிலே
முத்தங் கிடையாதே!"
'சங்கழுத்தும் உங்கள் தனிக்
கழுத் தென்றால், உகிரால்
அங்கழுத்தும் ரேகை அதிற்
பதிய மாட்டாதே!'
'தோளுக்கு மூங்கிலிணை
சொன்னால் பெருஞ்சோதி
நாளுக்கு மின்மினியை நாவலரும்
சொல்வாரே!
'பின்னழகைக் காணில் ரதிப்
பெண்ணை மதன் நாடுவனோ,
முன்னழகைக் காணில் முனிவர்
தவஞ் செய்வரோ?'

இவைகளின் கருத்துக்களையே மேலே விரித்துள்ளேன். எளிய நடை; எளிய வார்த்தைகள்; நளினமாக தொடுத்துள்ளார் வரிகளை! படிக்கும்போதே பொருள் புரியும்-இனிமை பயக்கும்! இவரின் உவமைகள் ரசித்து அனுபவிக்க வேண்டிய தன்மை படைத்தவையென்பது, இந்த ஒருசில கவிதையடிகளே சொல்லுகின்றன அன்றோ?

இவன் கவிஞன்! கலா உள்ளம் கொண்ட கலைஞன்! தேன் ததும்பும் சொன்மலர்களை கவிதைமாலைகளாக்குவதில்-இவன் கைதேர்ந்த கவிஞன்!

—எஸ். எழில்

★





... Madras-14. Printed by R. M. ...nagasabapathy at

